Once upon a midnight dreary, while I pondered, weak and weary, Over many a quaint and curious volume of forgotten lore — While I nodded, nearly napping, suddenly there came a tapping, As of some one gently rapping, rapping at my chamber door. " 'Tis some visitor," I muttered, "tapping at my chamber door — Only this and nothing more." / Ah, distinctly I remember it was in the bleak December; And each separate dying ember wrought its ghost upon the floor. Eagerly I wished the morrow; — vainly I had sought to borrow From my books surcease of sorrow — sorrow for the lost Lenore — For the rare and radiant maiden whom the angels name Lenore — Nameless here for evermore. / And the silken, sad, uncertain rustling of each purple curtain Thrilled me — filled me with fantastic terrors never felt before; So that now, to still the beating of my heart, I stood repeating "'Tis some visitor entreating entrance at my chamber door — Some late visitor entreating entrance at my chamber door; — This it is and nothing more." / Open here I flung the shutter, when, with many a flirt and flutter,In there stepped a stately Raven of the saintly days of yore;Not the least obeisance made he; not a minute stopped or stayed he; But, with mien of lord or lady, perched above my chamber door —Perched upon a bust of Pallas just above my chamber door — Perched, and sat, and nothing more. / And the lamp-light o'er him streaming throws his shadow on the floor; And my soul from out that shadow that lies floating on the floor Shall be lifted — nevermore!
~E. A. Poe

இரண்டாம் பதிப்பு

Garland of Poems

# சிறப்புப்பாயிரப் பாமாலைகள்

பேராசிரியர் அவர்கள், தமிழ், இலக்கியம், அறிவியல், உளவியல், கல்வியியல், சமயம், தத்துவம் என பல்வேறு துறைகளிலும் புலமை மிக்கவர்: செய்வன திருந்தச் செய்திடல் வேணடும் என்பதில் உறுதி கொண்டவர். அன்னாரது நூலுக்கு வழங்கப்பெற்ற 14 பாயிரங்களையும் தெரிவு செய்து, ***"சிறப்புப் பாயிரப் பாமாலைகள்"*** என்று நூலாக்கம் செய்திருப்பது பாராட்டுக்குரியது.

ஓவ்வொரு பாமாலையும், பேராசிரியரின் குணநலன் குறித்தும், குறிப்பிட்ட நூல் குறித்தும் நடுநிலைமையுடன் நின்று, கருத்துக்களைத் தெரிவிக்கும் மதிப்பீடாகவே கருத இடமுண்டு.

தொகுப்பாளர்
**ந பாஸ்கரன்**

*Anybody can write the first line of a poem, but is a very difficult task to make the second line rhyme with the first*

MARK TWAIN

quote tab .com



1916 2016

**ந சுப்பு ரெட்டியார் 100**

Centenary Committee Publication

# சிறப்புப்பாயிர
# பாமாலைகள்

தொகுப்பாளர்
**நா பாஸ்கரன்**



எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று,
ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர்.
திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை
உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர்.
பல பல்கலைக்கழகங்களில்
சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி,
நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர்.
பல ஆய்வாளர்களை உருவாக்கியவர்.
வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர்.
136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015~2016)
108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும்
மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

பேராசிரியரின் நூலுக்கு வழங்கப்பெற்ற 14 பாயிரங்களையும் தெரிவு செய்து, அவற்றை தொகுத்து “ சிறப்புப் பாயிரப் பாமாலைகள் ” என்ற இந்நூல் ஓர் அரிய பயனுள்ள தொகுப்பு. ஒவ்வொரு பாமாலையும், பேராசிரியரின் குணநலன் குறித்தும், குறிப்பிட்ட நூல் குறித்தும் நடுநிலைமையுடன் நின்று, கருத்துக்களைத் தெரிவிக்கும் மதிப்பீடாகவே அமைந்துள்ளமை குறிப்பிடத்தக்கது.

**ந சுப்பு ரெட்டியார் 100**
*Centenary Committee Publications*

ISBN: 978-81-939561-0-6

*eBOOK* ~ *மின் நூல்*



# சிறப்புப்பாயிர பாமாலைகள்



**ந பாஸ்கரன்**
[தொகுப்பாசிரியர்]
தலைமையாசிரியர்
அரசு உயர்நிலைப் பள்ளி
கோட்டாத்தூர்
திருச்சி மாவட்டம்





1916 2016
**ந சுப்பு ரெட்டியார் 100**
*Centenary Committee Publications*

சிறப்புப்பாயிர பாமாலைகள்



முதற்பதிப்பு – 2016
இரண்டாம் பதிப்பு - 2018

**Price: Rs.225.oo**

Published by:
**ந சுப்பு ரெட்டியார் 100**
*Centenary Committee Publications*
**AD-13, 5th Street, Anna Nagar West, Chennai – 600 040**




Wrapper design: **Centenary Committee**
Printed at: DJ Prints, Chennai – 600 095

# DEDICATION

## Dedicated to:



**மனோன்மணியம் சுந்தரம் பிள்ளை**

The 'Manonmaniam' in his name is the name of a play he wrote in 1891 and which is considered a classic. ' *Tamizh Thaai Vaazhthu* ' was written as an invocation to precede the play and was adopted as the State Anthem of Government of Tamil Nadu in June 1970. All official functions of the Government of Tamil Nadu start with this song and end with the Indian National Anthem.

# தொகுப்புரை

உலகமெங்கும் அதிக மக்களால் பேசப்படக் கூடிய மொழி ஆங்கிலமன்று ; சீன மொழியே ஆகும்.

விஜய நகரப் பேரரசை நிறுவிய ஹரிஹரர், புக்கர் என்னும் ரெட்டையர் வழி வந்தவரே "ரெட்டியர்"; மருவி "ரெட்டியார்" என ஆயிற்று. இவர்கள் தமிழ்நாட்டின் பல செழிப்பான பகுதிகளில் குடியேறினர்.

அவர்களுள் ஒரு பிரிவினர் கொல்லிமலை, பச்சைமலைகளுக்கு இடையிலுள்ள பகுதிகளில் குடியேறி, அங்கிருந்த அடர்ந்த காட்டை அழித்து, நன்செய் நிலத்தை உருவாக்கி, பெரும் நிலக்கிழார்களாகச் செல்வச் செழிப்புடன், மற்ற இனத்தவர்களிடையே இணக்கத்துடனும் வாழ்ந்திருந்தனர்.

இவர்கள் குடியேறி வாழ்ந்து வருகின்ற ஊர்களின் பெயர்களே - துறையூர், கோட்டாத்தூர், கீரம்பூர், சிக்கத்தம்பூர், மாராடி, சோபனபுரம், வைரிசெட்டிப்பாளையம், பச்சப்பெருமாள்பட்டி, ரெட்டியார்பட்டி ___ செழிப்பை காட்டுவன.

இவர்களில் சிலர், கோயில்கள், கல்வி நிறுவனங்கள், போன்றவற்றை நிறுவி பல அருஞ்செயல்கள் செய்து சிறப்படைந்தவர்கள்.

கல்விச்சிறப்பால், கடின உழைப்பால், அன்பு மனத்தால், எளியகுணத்தால் சிறப்படைந்தவர்களும் இருந்தனர்.

அவர்களுள் குறிப்பிடத்தக்கவர் கோட்டாத்தூர் ந சுப்பு ரெட்டியார் ஆவார்.

கோட்டாத்தூரில் எளிய குடும்பத்தில் பிறந்த இவர், தமது மூன்றாவது வயதிலேயே தந்தையை இழந்தார். ஆசிரியர் பயிற்சி படிக்க தமக்கிருந்த சிறிது நிலத்தையும் குறைந்த விலைக்கு விற்றார். வறுமையிலும் கல்வியில் அவர் முதல் மாணவராகவே விளங்கினார்.

துறையூர் ஜமீன்தார் உயர்நிலைப் பள்ளித் தலைமையாசிரியராக ஒன்பதாண்டுகள் பணி.

காரைக்குடி டாக்டர் அழகப்பச் செட்டியார் ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில் பத்தாண்டுகள் பணி.

திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தில் பதினேழாண்டுகள் பேராசிரியர் மற்றும் துறைத்தலைவர் பணி.

பணியிலிருந்தபடியே சென்னைப் பல்கலைக் கழகத்தில் தமிழில் எம்.ஏ. வரை படித்து அதில் முதல் நிலையில் தேறினார். திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தில் பணியாற்றும் போழ்து முனைவர் [PhD] பட்டமும் பெற்றார். தொண்ணூறு அகவை வரை நிறைவாழ்வு வாழ்ந்த இவர், முப்பத்து மூன்றாம் வயதில் "கவிஞன் உள்ளம்" நூலை எழுதி வெளியிட்டார். பிறகு தொடர்ந்து எழுதி, தம் வாழ்நாளில் 135 நூல்களை வெளியிட்டார். இவையன்றி பிறரது நூல்களையும் வெளியிட்டார்.

கற்பிக்கும் முறைகள் பற்றி ஐந்து நூல்கள். அறிவியலில் பதினான்கு நூல்கள். இலக்கிய நூல்கள், சமயநிலை விளக்கும் நூல்கள் பதினேழு. சான்றோர் வாழ்க்கை தொடர்பான நூல்கள் பனிரெண்டு. தன் வரலாற்று நூல்கள் நினைவுக்குமிழ்களாக வெளியாயின. இவரது திருக்குறள் தெளிவு, வைணவ உரை வளம், தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை ஆகிய நூல்களை கம்பராமன் எஸ்.கே.இராமராசன் பலரிடமும் படிக்கப் பரிந்துரைப்பாராம்.

நெற்றியில் நீறு மணக்கும் சைவ மரபினர். இவர் மனமோ ஈடு, வியாக்யானம் என்னும் வைணவ செல்வத்தில் திளைத்திருக்கும். சைவ, வைணவத்தில் ஆழ்ந்து அகன்ற நுண்மாண் நுழைபுலத்தவர்.

அக்காலத்தில் இவருடைய நூல்கள் இல்லாத நூலகங்களே தமிழகத்தில் இல்லை என்னும் சிறப்பைப் பெற்றிருந்தார். இவருடைய நூல்களுக்குச் சான்றோர் பலர் பாயிரமும், அணிந்துரைகளும் வழங்கிச் சிறப்பித்தனர்.

பாயிரம் = பா + இரம்.
இரம் = இரு + அம் = இருப்பது
பா = நூல் = பழங்காலத்தில் நூல்கள் யாவும் "பா" வடிவில் இயற்றப்பெற்றன. ஆதலால், "பா" என்பது நூலைக் குறித்தது. அந்த நூலில் இருப்பதைக் கூறுவது "பாயிரம்" ஆயிற்று.

சான்றோர் பலர் வழங்கிய "பாயிரப் பாமாலைகள்", அன்னாரது பதினான்கு நூல்களை அலங்கரிக்கின்றன. இப்பாயிரங்கள் வாயிலாக, நூலாசிரியரின் பண்புகளையும், அவரது எளிமை, அன்பு, விடாமுயற்சி, உழைப்பு போன்ற சிறப்பியல்புகளையும் நாம் அறியலாம். நூலின் உட்பொதிவையும் அறியலாம்.

அவ்வாறான பாயிரப் பாமாலைகளைத் தொகுத்து வெளியிடுவதென நூற்றாண்டு விழாக் குழுவினர் முடிவெடுத்ததை அடுத்து, இந்நூல் தங்கள் கரங்களில் தவழ்கிறது.

இந்நூலை ஒருமுறை வாசிப்பவர் ரெட்டியாரின் அனைத்து நூல்களையும் படிக்க வேண்டும் என்னும் ஆர்வத்தைப் பெறுவர் என்பதில் ஐயமில்லை.

இந்நூலிற்கு அணிந்துரை வழங்கியுள்ள பேராசிரியரின் தலைமாணாக்கர் முனைவர் ந கடிகாசலம் அவர்கட்கு நெஞ்சார்ந்த நன்றிகள்.

**ந பாஸ்கரன்**
தலைமையாசிரியர்
அரசு உயர்நிலைப் பள்ளி
கோட்டாத்தூர்
திருச்சி மாவட்டம்

# அணிந்துரை

***முனைவர் ந கடிகாசலம்***
*தமிழ்ப் பேராசிரியர்(ப.நி.)*
*உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனம்*
*தரமணி, சென்னை*

நூற்றாண்டு விழா காணும் பேராசிரியர் ந சுப்பு ரெட்டியார் அவர்களின் தலைமாணாக்கன் என்பது நான் பெற்ற பேறு.

அவரிடம் தமிழ் இலக்கியம் பயின்று, எம்.ஏ., பிஎச்.டி. பட்டங்களைப் பெற்றது என் வாழ்வில் மறக்க முடியாதது.

“பிள்ளைப்பெருமாள் அய்யங்காரின் அஷ்ட பிரபந்தம் நூலை ஆய்வு செய்.” என்று அவர் எனக்கிட்ட ஆணையை மறுப்பு ஏதும் கூறாமல், நிறைவேற்றியதில், என்னை விட, பேராசிரியருக்குத்தான் எல்லையற்ற மகிழ்ச்சி.

1983 ஜுன் திங்களில், சீன வானொலியில் பணி புரிய வாய்ப்பு உருவானபோது, “வெளிநாட்டவர் உன் புலமைக்கு வரவேற்பளிப்பது எனக்கும் பெருமையாக இருக்கிறது” என்று வாயார வாழ்த்தியவர் என் பேராசிரியப் பெருந்தகை.

தமிழ் இலக்கியம் மட்டும் போதாது, மொழியியல், வடமொழி, இந்தி ஆகியவற்றையும் கற்றுத் தேர்ந்திட வேண்டும் என்று அறிவுரை வழங்கி, என்னை ஆற்றுப்படுத்தியவர் பேராசிரியர் ந சுப்பு ரெட்டியார்.

1971 முதல், பேராசிரியரின் குடும்பத்தில் ஒருவனாக இருந்து வரும் எனக்கு, அன்னாரின் நூற்றாண்டு விழா வெளியீடான ***“சிறப்புப் பாயிரப் பாமாலைகள்”*** எனும் நூலுக்கு அணிந்துரை வழங்கும் வாய்ப்பு கிட்டியிருப்பது தமிழ்க் கடவுளின் அருள் என்றே கருதுகிறேன்.

பேராசிரியர் அவர்கள், தமிழ், இலக்கியம், அறிவியல், உளவியல், கல்வியியல், சமயம், தத்துவம் என பல்வேறு துறைகளிலும் புலமை மிக்கவர்: செய்வன திருந்தச் செய்திடல் வேணடும் என்பதில் உறுதி கொண்டவர்.

அன்னாரது நூலுக்கு வழங்கப்பெற்ற 14 பாயிரங்களையும் தெரிவு செய்து, ***“சிறப்புப் பாயிரப் பாமாலைகள்”*** என்று நூலாக்கம் செய்திருப்பது, பாராட்டுக்குரியது.

ஓவ்வொரு பாமாலையும், பேராசிரியரின் குணநலன் குறித்தும், குறிப்பிட்ட நூல் குறித்தும் நடுநிலைமையுடன் நின்று, கருத்துக்களைத் தெரிவிக்கும் மதிப்பீடாகவே கருத இடமுண்டு.

நூலின் மதிப்புரையாக, விமரிசனமாக, இந்தப் பாமாலைகள் விளங்குவதைச் சுட்டிக்காட்ட விரும்புகிறேன்.

பாயிரம் படைத்தருளிய அறிஞர் பெருமக்கள் போற்றுதலுக்குரியவர்கள்.

பேராசிரியருடன் பழகியோர் அனைவருக்கும், பின்வரும் பாயிர வரிகளைப் படித்தவுடன், அன்னாரின் திருவுருவம் மனக்கண்ணில் நிழலாடுவது உறுதி.

**திருநீறு ஒளிரும் நெற்றி**
**தீந்தமிழ் மணக்கும் செவ்வாய்**
**திருமால் பரவும் நெஞ்சம்**
**சேர்ந்தாரைத் தாங்கும் அன்பு**
**உருவாகத் தோன்றும் செம்மல்**
**உயர் சுப்புரெட்டி யாராம் (58)**

த. பெரியாண்டவன் அவர்களின் பதிவு இது.

பேராசிரியர்க்கு எளிமையும், உழைப்பும் இரு கண்கள். எளிமை என்பது அவருடன் ஒட்டிப் பிறந்த ஒன்று. உழைப்பு என்பது, அவரால் பெருமை பெற்ற ஒன்று.

**சுப்புரெட்டி யாரென்று பெயர் சொன்னாலே**
**சுறுசுறுப்பும் பேருழைப்பும் துள்ளு மாமே ! (71)**

என்கிறார் அர. சிங்காரவடிவேலன்.

பேராசிரியரின் பெயரை உச்சரித்தாலே தமிழ் மணக்கும் என்கிறார் சௌந்தரா கைலாசம். ஆணவம் என்பதே இல்லாமல் அமைதி காத்த தமிழறிஞர் என்று மேலும் புகழாரம் சூட்டுகிறார்.

**சுப்புரெட்டி யாரென்று சொல்லும் போதே**
**சுகமான சுவைமிக்க தமிழ் மணக்கும் (26)**

**ஆணவமே இல்லாமல் அமைதி சார்ந்த**
**அன்பொளிரும் நல்லகத்தை உடைமை பெற்றார் (29)**

என்பது உண்மை: வெறும் புகழ்ச்சியில்லை.

பேராசிரியரின் படைப்புத் திறன் பலராலும் போற்றப்பெற்றது. எளிய நடை இவருக்குச் சொந்தம். வாசகனுக்குப் போய்ச் சேர்வது என்பது படைத்தவனுக்கு இன்பம் தருவதாகும் என்பது அவர்தம் எண்ணம். எனவேதான்,

**புலமையை எளிமை யாக்கிச்**
**சுகமுற வரையும் சுப்பு**
**ரெட்டியார் (76)**

என்று பாராட்டுகிறார் ம.வே.பசுபதி.

நூலைப் படிப்போர்க்கு விருந்து ஊட்டுவது பேராசிரியரின் தனிச்சிறப்பாக அமைகின்றது. இதை,

**சொல்லுக்கு நல்லமுதச் சுவையை ஏற்றுச்**
**சுவைப்பார்க்கு விருந்தூட்டும் வேளாண் செல்வர் (84)**

என, அரங்க. சீனிவாசன் வெளிப்படுத்தியிருக்கிறார்.

பேராசிரியரின் தமிழ்த் தொண்டு பாராட்டுக்குரியது என்பது, ஏற்புடையதே ! இதை,

**அருந்தமிழ்ப் புலமை மிக்கார்**
**ஆங்கில மொழியில் வல்லார்**
**இருமொழிக் கண்ணும் நூல்கள்**
**இயற்றிடும் ஏற்றம் உள்ளார் (5)**

என்று பதிவு செய்கிறார் க. பெருமாள்.

**நற்றமிழ்த் துறைகள் என்னும்**
**கடல்களைக் கடந்த நல்லார் (46)**

என்றும்,

**தமிழ்ப்பயிர்க் கருளும் கங்கைப்**
**பாய்ச்சலாம் இவரின் தொண்டு ! (50)**

என்றும், மதிப்பீடு செய்கிறார் மு. இராதாக்கிருஷ்ணன்.

**ஆயிரத்தில் ஒருவராய்த் தோன்றினார் (88)**

என வீர. அரங்கனாரும்,

**இப்படியோர் தமிழாசான் கிடைத்தது செந்**
**தமிழ்த்தாயின் இன்பப் பேறே (40)**

என நாரா. நாச்சியப்பனும் பேராசிரியர்க்கு புகழ்மாலை சூட்டியிருப்பது அறியத்தக்கது.

***தமிழ் பயிற்றும் முறை*** எனும் நூல் பேராசிரியரின் தலை சிறந்த நூல்களில் தனியிடம் பெறுகிறது.

**ஆசிரியப் பணியிருக்கும் வரையிருக்கும்**
**அவர்படைத்த தமிழ்பயிற்று முறையின் கீர்த்தி (56)**

என்று குறள்வடிவில் புகழ்கிறார் இரா. திருமுருகன்

தமிழின் ஆசிரியர் சுப்பு ரெட்டியார் என்பது கா. வெள்ளைவாரணாரின் தீர்ப்பு.

**தமிழ்பயிற்றும் முறை தந்த**
**தண்டமிழின் ஆசிரியன் (13)**

என்பது அவர்தம் வேதவாக்கு.

ஆக, போரசிரியரின் சாதனைப் பட்டியல் நீண்டுகொண்டே போகிறது.

**அன்பிற் புரந்திட்ட நம்சுப்பு ரெட்டியாரின்**
**சாதனைக்கு வரம்பில்லை (97)**

என்று, பாராட்டுப் பத்திரம் வாசிக்கிறார் எஸ்.கே.இராமராஜன்

“***சிறப்புப் பாயிரப் பாமாலைகள்*** எனும் இந்நூலை ஒருமுறை வாசிப்பவர், ரெட்டியாரின் அனைத்து நூல்களையும் படிக்க வேண்டும் என்னும் ஆர்வத்தைப் பெறுவர் என்பதில் ஐயமில்லை” என்று, இந்நூலின் தொகுப்புரையில் ந. பாஸ்கரன் கோடிட்டுக் காட்டியிருப்பது உணரத்தக்கது.

நூற்றாண்டு விழாவினையொட்டி வெளிவரும் “***சிறப்புப் பாயிரப் பாமாலைகள்***” எனும் இந்நூல், பேராசிரியரின் மணிமகுடத்தில் மற்றுமோர் வைர மணியாகும்.

இந்நூலைச் சிறப்பான முறையில் வெளிக் கொணரும் நூற்றாண்டுவிழாக் குழுவினர்க்கும், அருமையான தொகுப்புரை வழங்கிச் சிறப்பித்த ந. பாஸ்கரன் அவர்களுக்கும் பாராட்டுக்களைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

சென்னை – 600 063
8 பிப்ரவரி 2016

**ந. கடிகாசலம்**

# உள்ளடக்கம்



# பின்னிணைப்புகள்






*"If you can't be a poet, be the poem."*

<< David Carradine

1916 2016

# சிறப்புப் பாயிரப் பாமாலைகள்

**Some** of Professor's works have one unique feature - Sirappu Paayira Paamalai [in Tamil], rendered by the great Tamil scholars, Tamil poets offering scholarly tributes to Professor and his works. Paayira Paamalai highlights Professor's life to a certain extent, his works and their special features, especially the characteristic style of the work for which the said Paayira Paamalai is rendered. Fourteen out of 135 books written by the Professor have these features which are listed in detail. A wide range of variety in genre and other salient characteristics are noteworthy.

"Poetry is an echo, asking a shadow to dance."
Carl Sandburg

To be a poet is a condition, not a profession.
Robert Frost

**"Poetry is the record of the best and happiest moments of the happiest and best minds."**

**<< Percy Bysshe Shelley**




| S.No. | Year | Name of the Publication | Sirappu Paayira Paamalai rendered by: |
|---|---|---|---|
| 01 | 1985 | தம்பிரான் தோழர்<br>**Thambiraan Thozhar** | Prof K Perumal, Principal [Retd], Government Arts Colleges, Tamilnadu |
| 02 | 1985 | வைணவ உரைவளம்<br>**Vainava Uraivalam** | SK Ramarajan [Kambaraman], Former Asst Editor, Department of Dictionary, Tamil University, Tanjore |
| 03 | 1986 | நாவுக்கரசர்<br>**Naavukkarasar** | Prof K Vellaivaranaar, Former Head of Dept of Tamil, Annamalai University, Annamalainagar, Tamilnadu |
| 04 | 1986 | ஞான சம்பந்தர்<br>**Gnanasambandhar** | Tirumathi Soundhara Kailasam |
| 05 | 1987 | ஆழ்வார்களின் ஆரா அமுது<br>**Aazhvarkalin Aaraa Amudhu** | Kavignar N Nachiayappan, Novel Arts Printers, Chennai - 600 014 |
| 06 | 1987 | சடகோபன் செந்தமிழ்<br>**Sadagopan Senthamizh** | Vidwan M Radhakrishnan, Puduchery |
| 07 | 1987 | விட்டு சித்தன் விரித்த தமிழ்<br>**Vittu Chitthan Viritha Thamizh** | Pulavar R Thirumuguran, Pondicherry - 605 001 |
| 08 | 1989 | மாணிக்கவாசகர்<br>**Maanickavasakar** | Pulavar T Periyaandhavan, Asst Director, Department of Tamil Development, Government of Tamilnadu, Chennai - 600 108 |
| 09 | 1992 | பரகாலன் பைந்தமிழ்<br>**Parakaalan Paithamizh** | Prof Dr PM Santhamurthi, Head of Dept of Tamil, Saurashtra College, Madurai - 625 006 |
| 10 | 1992 | வடவேங்கடமும்திருவேங்கடமும்<br>**Vadavengadamum Thiruvengadamum** | R Singaravadivelan, Kandanoor |
| 11 | 1993 | வாய்மொழியும் வாசகமும்<br>**Vaaimozhiyum Vaasakamum** | Pulavar Prof Dr KV Pasupathi, Principal, Sri KSS Arts College, Thirupanandhal, Tanjore Dist, Tamilnadu |
| 12 | 1994 | நவவித சம்பந்தம்<br>**Navavitha Sambandham** | Arutkavi Aranga Srinivasan |
| 13 | 1994 | அர்த்த பஞ்சகம்<br>**Artha Panchakam** | Pulavar V Aranganaar, Tamil Teacher & Headmaster [Retd], Naaraanmai Board High School, Villupuram, Tamilnadu |
| 14 | 1995 | வைணவ செல்வம்<br>**Vainava Selvam** | SK Ramarajan [Kambaraman], Former Asst Editor, Department of Dictionary, Tamil University, Tanjore |







தம்பிரான் தோழர

**Thambiraan Thozhar**


பேராசிரியர் **க. பெருமாள்**

*முதல்வர் (ஓய்வு),*

*அரசினர் கலைக் கல்லூரிகள், தமிழ்நாடு.*


***அவர்கள் அன்புடன் உவந்தளித்த***

## பயண நூல்கள் நமக்களித்தார் யார்?

*1. கல்லாரே மிக்குள்ள இக்காலம் தன்னில்*
*கல்லாரை முன்னேற்றும் கருத்தாற்றல் உள்ள*
*நல்லாரும் பாராட்ட, நன்றாக நாடி,*
*நல்லுலகை உருவாக்கும் நல்லெண்ணத் தோடு*
*சொல்லாலும் பொருளாலும் சுவையாலும் மிக்க*
*தொகைநூலும் அறநூலும் ஆன்மிக நூலும்*
*வல்லாரை உருவாக்கும் அறிவியல் நூலும்*
*வகுத்தாய்ந்து பயன்நூல்கள் நமக்களித்தார் யாரோ?*

***அவர்தாம் 'அருங்கலைக்கோன்' ரெட்டியார்***




2. பேரன்பால் உலகனைத்தும் படைத்தழித்துக் காக்கும்
பெருமாளின் அழகெல்லாம் பெருந்தமிழில் பாடி,
ஆராத உள்ளுணர்வால் ஆழங்கால் பட்ட
ஆழ்வார்கள் அருள்செய்த பிரபந்தம் தம்மைச்
சீராக ஆராய்ந்து தெளிந்துணர்ந்த உண்மைத்
திறமெல்லாம் மறவாமல் கட்டுரைகள் தீட்டி,
ஊரெல்லாம் உலகெல்லாம் உணர்ந்தோ திவாழ
உயிரனைய நன்னூல்கள் உவந்தெழுதித் தந்து
தீராத உள்ளன்பால் தமிழணங்கைப் போற்றித்
திகழ்கின்ற சுப்புரெட்டி அவரென்பேன் அம்மா!

## அவர்தம் புலவர்க்குத் தோழர்

3. பத்தியால் உலகை ஊட்டிப்
பரமனுக் கின்பம் செய்யும்
வித்தகர் நாயன் மார்கள்
விளம்பிய பதிகம் ஓதி
உத்தம ராகி இந்த
உலகெலாம் உயர்ந்து வாழப்
புத்தி நூல் அளித்தார் எல்லாப்
புலவர்க்கும் தோழர் அம்மா!

## அவர்தாம் கோதில்லார்

4. படிப்பவர் உயர்தற் கேற்ற
படிப்பினை நல்க வல்ல
அடிப்படை நூல்கள் ஆக்கி
அறிவியல் நூல்கள் ஆக்கி
குடிச்செயல் வகைகள் காட்டும்!
குணநல நூல்கள் ஆக்கிக்
கொடுத்தநம் டாக்டர் சுப்பு
ரெட்டியார் கோதில் லாதார்.




## அவர் மனைவிமக்கள் மகிழ்வுற வாழுகின்றார்

*5. அருந்தமிழ்ப் புலமை மிக்கார்;*
*ஆங்கில மொழியில் வல்லார்;*
*இருமொழிக் கண்ணும் நூல்கள்*
*இயற்றிடும் ஏற்றம் உள்ளார்;*
*திருவினை முயற்சி யாலே*
*திருவெலாம் நிரம்பப் பெற்றார்*
*மருவிய மனவை மக்கள்*
*மகிழ்வுற வாழு கின்றார்.*

*6. இளமையில் வறுமை யுற்றார்;*
*இன்னல்கள் பலவும் பட்டார்;*
*வளமிகு தமிழைக் கற்றார்;*
*வறுமையை வென்றார்; சான்றோர்*
*உளம்புகழ்ந் துவந்து போற்ற*
*உயர்நிலைப் பற்றிக் கல்விக்*
*களங்களில் கழகம் தம்மில்*
*கற்பித்தார்; உயர்ந்தார்; மூத்தார்.*

*7. மூப்பினை அடைந்தா ரேனும்,*
*மூப்பிலா தோங்கி, ஞாலம்*
*காப்பதோர் ஆற்றல் பெற்ற*
*கருத்தெலாம் விளக்க வல்ல*
*நாப்பத மொழிகள் பேசி,*
*நற்கலை ஆய்வு நூல்கள்*
*பூப்ப தற் குதவி, இன்பம்*
*பூத்துளம் மகிழு கின்றார்.*

*8. நகைத்திளம் முகத்தர் ஆனார்;*
*நற்றமிழ் நூல்கள் காட்டும்*
*அகத்திணைக் கொள்கை தந்தார்;*
**அம்புலிப் பயணம்** *தந்தார்;*
*பகைத்திறம் அழிக்க வல்ல*
*பத்திநன் னெறிகள் ஆய்ந்து*
*வகைப்படச் சமய நூல்கள்*
*வழங்கினார்; வள்ளல் ஆனார்.*




*9. அன்பினால் இன்பம் காணும்*
*ஆண்டவன் அருளில்மூழ்கி,*
*அன்பினால் தொண்டு செய்த*
*அடியவர் தம்மைப் போற்றி,*
*அன்பினால்* **டாக்டர் சுப்பு**
**ரெட்டியார்** *ஆக்கி யுள்ள*
**'தம்பிரான் தோழர்'** *என்னும்*
*தகவுசால் நூலைப் பார்த்தேன்.*

*10. திருமகள் கேள்வன் தாளைத்*
*திருமனத் தேந்தி, நாளும்*
*அருந்தமிழ் மகிழ, நூல்கள்*
*ஆக்குமோர் கடமை செய்து*
*வருபவர்,* **நண்பர் டாக்டர்**
*வன்றொண்டர் தம்மேல் செய்த*
*பொருவிலாத் தோழர் நூலின்*
*பொற்புணர்ந் துவகை கொண்டேன்.*

*11. ஆண்டவன் அருளைக் காட்டும்*
*ஆயிரம் ஆடல் தம்முள்*
*ஆண்டவன் தோழர் ஆரூர்*
*அடியவர் பொருட்டுச் செய்த*
*நீண்டதோர் ஆடல் காட்டும்*
*நீதியை உலகம் காண*
*வேண்டுமென் றாய்ந்து தந்த*
*விளக்கினை விளங்கிக் கொண்டேன்.*

*12. தூய்மையே உருவ மான*
*சுந்தரர் பரவை யோடும்*
*வாய்மையே உருவ மான*
*சங்கிலி வனிதை யோடும்*
*தோய்ந்நல் இன்ப வாழ்வும்*
*தொடர்ந்தவர் துன்ப வாழ்வும்*
*ஆய்ந்துள ரெட்டி யாரின்*
*ஆற்றலும் அறிவும் கண்டேன்*




*13. தண்டனை வழங்கி, நல்ல*
*தகுதியை வளர்த்துக் கொள்ளும்*
*தொண்டராய் உயர்த்தி, ஞானத்*
*தொண்டினைச் செய்ய வைத்தல்*
*அண்டமும் அனைத்து காக்கும்*
*ஆண்டவன் அருளென் றெண்ணிக்*
*கொண்டுளம் தெளியு மாறு*
*கொடுத்ததிந் நூலென் றோர்ந்தேன்.*

*14. இறைவனுக் கின்பம் தொண்டர்*
*இடர்களைந் தருள்தல் என்னும்*
*மறையினை எடுத்துக் காட்ட,*
*மலரடி வருந்தத் தூது*
*முறையினால் நடந்த தென்று,*
*முற்றிய பத்தர் எண்ணிக்*
*கறையிலா இன்பம் எய்தும்*
*காட்சியும் கருத்தும் தேர்ந்தேன்.*

*15. முத்தமிழ் நாட்டி லுள்ள*
*முக்கணன் கோயில் தோறும்*
*பத்தியால் பாடி ஆடிப்*
*பழவினை அறுத்த ஞான*
*வித்தகர் நாவ லூரார்*
*விமலரின் தோழர் ஆகிப்*
**'பித்தரே'** *என்று பாடிப்*
*பிழையறுத் துயர்ந்த தாய்ந்தோன்.*

*16. உழைப்பினால் உயர்ந்த மு.வ*
*உதவியை உயர்ந்து போற்றித்*
*தழைத்துள* **டாக்டர் சுப்பு**
**ரெட்டியார்** *தகுதி யாலே*
*இழைத்துள நூல்கள் எல்லாம்*
*இலக்கிய நயங்கள் காட்டிப்*
*பிழைப்பதற் கறங்கள் காட்டிப்*
*பிறங்குதல் ஆய்ந்து தேர்ந்தேன்*




*17. தம்பிரான் தோழர் கோயில்*
*தலந்தொறும் சென்று போற்றிச்*
*செந்தமிழ்ப் பதிகம் பாடிச்*
*சேவைசெய் திறங்கள் எல்லாம்*
*நம்முளம் கொள்ளு மாறு*
*நன்கெடுத் தியம்பும் டாக்டர்*
*தம்மறி வாற்றல் முற்றும்*
*தமிழ்க்களித் துவத்தல் கண்டேன்.*

*பாராட்டு*

*18. வடித்தெடுத்த அமிழ்தனைய தமிழ்மொழியில் ஈசன்*
*வன்றொண்டர்க் கருள்செய்த வரலாற்றைத் தீட்டி*
*அடிக்குறிப்பும் மேற்கோளும் அழகாகக் காட்டி*
*அவர்பணிந்த தலமெல்லாம் தெளிந்துநிலை நாட்டி*
*பிடித்தலைக்கும் பேராசைப் பேயனைத்தும் ஓட்டி*
*பிழையறுக்கும் மனையறத்தில் பேரின்பம் கண்டு*
*குடிப்பெருமை தனையுய்த்தும் குணத்தழகர் தம்மைக்*
*குன்றாத பேரன்பால் பாராட்டு கின்றேன்.*

*19. ஆதாரம் பலகாட்டி அகச்சான்றால் புறச்சான்றால்*
*ஆருரர் வரலாற்றை ஆராய்ந்து தெளிந்தோதிக்*
*காதாரக் கேட்போரும் கருத்தாரப் படிப்போரும்*
*களித்துவக்கும் படியிருக்கும் திருக்காதல் மலரன்பைப்*
*போதாரம் எனச்சூட்டி பொருளில்லாச் சடங்கென்னும்*
*பொலிவில்லாப் பொருட்செலவும் பொய்ப்பூசைத்*
*தீதாரம் எனநீக்கித் தேவாரம் புகழ்ந்தேத்தும்*
*திருவடியில் முடிவைத்துத் திகழ்வோர்க்குப் பல்லாண்டு*

*20. எம்பெருமான் திருவடியை*
*எப்போதும் பணிந்தேத்திச்*
*செந்தமிழில் பாட்டிசைத்துச்*
*சேவித்த வன்றொண்டர்*
*தம்முடைய வரலாற்றின்*
*தகவனைத்தும் ஆய்ந்துரைத்து*
*நம்முடைய உளங்கவர்ந்த*
*நல்லார்க்குப் பல்லாண்டு.*




*21. யாருக்கும் தீங்கறியாப்*
*பூஞ்சிரிப்பர்; தம்மறிவைப்*
*பாருக்குத் தந்துவக்கும்*
*பாங்காளர் பண்பாட்டின்*
*வேருக்கு நீருற்றும்*
*வித்தகர்தம் சத்தான*
*சீருக்கும் பல்லாண்டு*
*தீந்தமிழ்க்கும் பல்லாண்டு.*

**வாழ்த்து**

*22. தற்பரன் திருத்தாள் பற்றித்*
*தமிழமிழ் தூட்டி அன்பால்*
*அற்புதம் நிகழ்த்தி ஞாலம்*
*அமைதியாய் வாழ்தற் கேற்ற*
*கற்பினைக் காத்துத் தூய*
*காதலால் இன்பம் துய்த்து*
*நற்றவம் செய்த ஆரூர்*
*நம்பியும் நாடும் வாழ்க.*

*23. அவருயர் வாழ்வு பற்றி*
*அறிவன அனைத்தும் ஆய்ந்து*
*தவறிலா நடையில் நல்ல*
*தமிழினில் எழுதிக் கற்றார்*
*எவருமே புகழும் வண்ணம்*
*எடுத்துரைத் துலகிற் கீந்த*
*கவரிலா மனத்தர்* **சுப்பு**
**ரெட்டியார்** *கலைகள் வாழ்க.*

*24. அறிவியற் கலைகள் பற்றி*
*அறநெறி வாழ்வு பற்றி*
*குறிகுணம் இல்லா ஈசன்*
*குரைகழல் நற்றாள் பற்றி*
*நெறியுடன் வாழ்ந்தோர் ஆன்ம*
*நேயநன் நெறிகள் பற்றி அறிவறி ஆய்வால் தந்த*
*அவர்திரு நூல்கள் வாழ்க*
.



*25. அறிவுக்கு விருந்தும் நல்ல*
*அறிவியல் விருந்தும் வாழ்க்கை*
*நெறிகளுக் குதவும் காதல்*
*நிறைநல நூலும், காம*
*வெறிகளுக் கெரிகள் ஊட்டி,*
*வெம்பகை நீக்கி, ஐந்து*
*பொறிகளுக் கொழுக்கம் ஊட்டிப்*
*புகழ்பெறு நூலும் வாழ்க.*

*26. சொல்வகைக் கெட்டா ஞானச்*
*சுடர்திரு* **வேங்க டத்தான்**
**பல்கலைக் கழகந்** *தன்னில்*
*பயன்தமிழ் ஆசா னாகி*
*நல்வகைப் பணிகள் செய்து,*
*நல்லுல கமைக்க வல்ல*
*கல்வியை வளர்த்த* **சுப்பு**
**ரெட்டியார்** *களித்து வாழ்க.*

*27. சிந்தனைத் தெளிவு பெற்றுச்*
*சிறந்தவர் எவரும் போற்றும்*
*சுந்தரர் தம்மை அன்புத்*
*தோழராய் ஏற்றுக் கொண்ட*
*செந்தழல் மேனி யானின்,*
*செந்தமிழ்க் காதலானின்,*
*அந்தமில் இன்பத் தானின்*
*அடிஅவர் முடிமேல் வாழ்க.*

*28.* **எழுபதில் ஒன்று போக**
**எஞ்சிய அகவைக் குள்ளே**
**எழுபதின் மேலாம் நூல்கள்**
**எழுதிய எழுத்தின் வேந்தர்**
*பழுதிலாப் பண்பர், அன்பர்*
*பரிசுகள் பெற்ற நூலோர்,*
*விழுமிய மனைவி மக்கள்*
*விழுதெனப் பெற்றோர் வாழ்க.*




*29. உலகெலாம் படைத்துக் காக்கும்*
*ஒப்பிலான் அருளில் மூழ்கிப்*
*புலங்களைத் திருத்திக் காத்துப்*
*புவிசுமை நீக்கி, இன்ப*
*நலமெலாம் பெருக்க வல்ல*
*நல்லநூல் இன்னும் ஆக்கி*
*இலகுநற் சான்றோர் வாழ்த்தை*
*ஏற்றிவர் இனிது வாழ்க.*

*30. இளமையில் பெற்ற துன்பம்*
*யாவையும் வென்ற வீரர்,*
*வளமொழித் தமிழைக் கற்று*
*வறுமையை வென்ற சூரர்,*
*உளம்நிறை இறைவன் அன்பில்*
*ஊறிய தீரர், கல்விக்*
*களங்களில் கழகம் தம்மில்*
*கற்றவர் புகழ வாழ்க.*

*31. கடலெனக் கல்வி கேள்விக்*
*கரையெலாம் கடந்த ஞானச்*
*சுடரொளிச் செல்வர், தோழர்,*
*சுந்தரர் அருளால் சூதில்*
*படலறி யாத பண்பர்,*
*பல்கலை வல்லார், வாழ்வில்*
*இடரறுத் துயர்த்தும் நூல்கள்*
*எண்ணில இயற்றி வாழ்க.*

* * *

**பித்தா பிறைசூடி பெருமானே அருளாளா**
**எத்தான் மறவாதே நினைக்கின்றேன் மனத்துன்னை**
**வைத்தாய்பெண் ணைத்தென்பால் வெண்ணெய்நல்லூர்**
**அருள்துறையுள்**
**அத்தா உனக்காளாய் இனிஅல்லேன் எனலாமே!**
***— சுந்தரர்***







***வைணவ உரைவளம்***

## Vainava Uraivalam


*திரு.* **S.K. இராமாசன்**

*('கம்பராமன்') பதிப்பாசிரியர், பேரகராதித்துறை,*

*தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சை.*


***அவர்கள் அன்புடன் உவந்தளித்த***

## சிறப்புப் பாயிர மாலை

*நற்றவ வடிவாம் வைதிக மதத்தை*
*நவையறு கோவிலைக் குளத்தைப்*
*பெற்றியிற் காக்க எண்ணிய விஜயப்*
*பேரர சுளத்தினில் ஆய்ந்து*
*கொற்றமார் குன்றில் மேவுரெட்டிககளைக்*
*குலவிய தமிழகத் தனுப்பி*
*வெற்றிபெற் றது; நற் கொண்டரெட் டிகளும்*
*வீரத்தால் சமயத்தைப் புரந்தார்.* 1




*குன்றினிலிருந்து மேவுகா ரணத்தால்*
*குலவுகொண் டாரெட்டி என்று*
*மன்றெலாம் புகழ்ப் பொலிந்தவர் நிலத்தைப்*
*மகிழ்வுடன் உழுதொழில் புரிந்து*
*நன்றமை பண்ட குலத்தவர் என்று*
*நானிலம் புகல்பெயர் பெற்றுத்*
*தென்றமிழ் நாட்டை யுயர்த்தினார்; இவரால்*
*செந்தமிழ் வீறுபெற் றதுவால்.* *2*

*சங்கரன் உமையோ டுவப்புடன் மேவித்*
*தகவுறு பெருங்களிப் பெய்தும்*
*வெங்கனூர்ச் சிற்பம், சிவப்பிர காசர்*
*மேதினிக் களித்தநன் னூல்கள்*
*கங்கைபோற் பெருகும் காவடிச் சிந்து*
*காசினிக் கிக்குலம் புரிந்த*
*துங்கமார் தொண்டை வியப்புற விளக்கும்*
*துவங்குக இக்குலம் என்னும்.* *3*

*இத்தகு புகழ்சால் குலத்துலோர் புரிந்து*
*இணையிலா நற்றவத் தாலே*
*வித்தகம் மிக்க செந்தமிழ் உயர,*
*மேவிய பல்கலை ஒளிர,*
*எத்தலங் களிலும் அறிவியல் பொலிய*
*இணையிலா முயற்சியே வடிவாம்*
*சித்தமொ டுதித்தார் பல்கலை யாவும்*
*தேர்சுப்பு ரெட்டியாம் தோன்றல்.* *4*

*உலகினுக் கன்றே சமரசந் தன்னை*
*உணர்த்திய எதுமலை என்னும்*
*தலமதில் மேவும் தெய்வங்கள் அருளத்*
*தகவுறு கல்வியி லுயர்ந்து*
*நலமுறு துறையூர் உயர்நிலைப் பள்ளி*
*நவையறு பெயர்பெற உழைத்துப்*
*புலமமை காரைக் குடியினிற் கல்விப்*
*புனத்தினைக் காத்தனர், அன்பர்,* *5*




*பாங்குறு காரைக் குடியினிற் கம்பன்*
*பாலமு துண்டசெம் மாந்து*
*தேங்கிய களிப்பை மழையெனப் பொலியத்*
*திருமகள் நாயகன் பொலியும்*
*வேங்கடம் 'வாவா' என்றுவந் தழைக்க*
*மேவியங் கொப்பிலாத் தமிழை*
*ஓங்குறச் செய்தார்; அருங்கலைக் கோனென்*
*றுவந்தது குன்றையா தீனம்.* 6

*கற்றவர் பராவும் வேங்கடக் குன்றில்*
*கனிவொடு மேவிடும் போதில்*
*பெற்றியல் மிக்க வைணவக் கடலிற்*
*பெட்புடன் பன்முறை தோய்ந்தும்*
*நற்றவத் திருவாய் மொழியினை யாய்ந்தும்*
*நயமுறுத் தந்த நூல் தேர்ந்து*
*பற்றுடன் 'டாக்டர்' என்றுயர் பட்டம்*
*பண்புடன் தந்தனள் தமிழ்த்தாய்.* 7

*ஓங்கிய தமிழ்த்தாய் இதயமாய்ப் பொலிவும்*
*ஒப்பிலா வாய்மொழி ஆய்ந்து*
*பாங்குறத் தந்த தத்துவ நன்னூல்*
*பாய்தலாற் புவிஎங்கும் இலங்கும்*
*ஆங்கிலம் இனிய சருக்கரைக் குன்றம்*
*அமைவுறக் கரைந்தபாற் கடலாய்*
*ஈங்குயர் சுவையைப் பெற்றது; தமிழ்த்தாய்*
*இதயத்தில் உவகைபொங் கியதே.* 8

*செந்தமிழ் நாட்டின் இருகணாய்ப் பொலியும்*
*சீரிய வைணவந் தனையும்*
*நந்தலற் றோங்கும் உயர்வினைப் பெற்ற*
*நவையறு புகழ்ச்சைவந் தனையும்*
*சிந்தையில் ஆய்ந்து தருமிரு நூலைச்*
*செம்மையாய் ஆய்பவர் எவரும்*
*புந்தியில் சுப்பு ரெட்டியின் ஞானப்*
*புலமைக்கு முதல்மதிப் பளிப்பார்.* 9




*துங்கமார் முயற்சி வடிவமாய் என்றும்*
*துலங்கிடும் சுப்புரெட் டியின்கை*
*தங்கிடத் தவம்செய் எழுதுகோல் களித்துத்*
*தாளினில் புனிதக்கூத் தியற்றின்*
*பொங்கிய சமய தத்துவம் விளங்கும்;*
*புனிதஇல் லறநெறி துலங்கும்;*
*மங்கலில் லாமல் அணுவியல் இலங்கும்;*
*மடமையே அச்சத்தாற் கலங்கும்.* 10

*அருங்கலை வினோதர் இவ்வண்ணம் பன்னூல்*
*அளித்தனர்; அறிஞர்கள் வாழ்த்தை*
*மருங்குறப் பெற்றுக் களித்தனர்; மேலும்*
*மனத்தினில் வேட்கைஓங் குதலால்*
*கருங்கலும் உருக வைணவச் செல்வர்*
*கனிந்தருள் உரைகளுக் கிடைசேர்*
*பெருங்கனிக் குள்ளார் சாற்றினைப் பிழிந்து*
*பேரமு தாக்கிநன் களித்தார்.* 11

*மறைகளும் பரவ உலகமும் பரவ*
*மகிழ்வுடன் பாற்கடல் மேவும்*
*இறைவனை உணர்த்தும் புராணமாகக் கதைகள்*
*இணையிலா ஐதிகம் சான்றோர்*
*நிறைவுறப் பேசும் நல்லுரை யாடல்*
*நேயமார் சொற்பொருள் விளக்கம்*
*முறைமையால் விளக்கும் இப்பெரும் பனுவல்*
*முதன்மையாற் களஞ்சியம் ஆகும்.* 12

*பொன்னியின் நடுவண் எம்பிரான் மேவிப்*
*பொலிவுறு கோவிலை விளக்கும்*
*மன்னிய விமானம் எட்டெழுத் தின்கண்*
*மருவுமோங் காரமே என்றும்*
*பன்னரும் ஏழு மதில்களும் மற்றைப்*
*பண்புறும் ஏழெழுத் தென்றும்*
*நன்னய மாக விளக்குதல் கண்டு*
*நான்மறை பூரித்து வாழ்த்தும்.* 13




*உலடயவர் தமது பாதுகை தாங்கி*
*ஒப்பிலா நுண்பொருள் அறிந்து*
*தடையறப் பகர்ந்த திறங்கொள்எம் பார்; நல்*
*தலைவனைப் பணிந்துமுக் கோலை*
*அடைவுடன் "எனைநீ காத்திடு" கென்ன*
*அமைந்ததே என்னும்நஞ் சீயர்*
*நடையினை நோக்கி விளக்கிய இந்நூல்*
*நாம்புரி தவப்பயன் அன்றோ?* 14

*கடலினுள் ஆழ்ந் து விருப்புடன் சென்று*
*கையினால் பன்முறை அரித்துச்*
*சுடர்விடு மணிகள் கொணர்ந்துல குவப்பத்*
*துறையினிற் குவிப்பவர் போலத்*
*திடமுடன் புகுந்து வைணவ வுரைக்குள்*
*திகழ்தரு நுண்பொருள் வழங்கும்*
*அடலினை வியந்தேன் புலமையாம் செல்விக்*
*கமைந்தநற் றிலகம்இப் பனுவல்.* 15

* * *









## *நாவுக்கரசர்*
## **Naavukkarasar**

*பேராசிரியர்* ***க. வெள்ளை வாரணனார்***
*முன்னாள் தமிழ்துறைத் தலைவர்,*
*அண்ணாமலைப் பல்கலைக் கழகம், தமிழ்ப் பல்கலைக் கழகம்*

***அவர்கள் அன்புடன் உவந்தளித்த***

## *நாவுக்கரசர்*
## **சிறப்புப் பாயிர மலர்**

*1. நன்றுடையான் வீற்றிருக்கும்* ***சிராப்பள்ளி***
***வட்டத்து*** *நல்லோர் வாழும்*
*தொன்றுமுதிர் பதியின்கண் இரட்டியார்*
*தொன்மரபில் வந்த தோன்றல்*
*குன்றெனுஞ்சீர்ப் பெருங்குணத்தான் குறைவிலா*
*நல்லுளத்தான் கோதொன் றில்லான்*
*தென்றமிழ்தேர் பேராசான்* ***சுப்புரெட்டி***
***யா****ரென்னும் செல்வ னாவான்.*



*2. ஊக்கமுடள் கல்விபயில் உரனுடையான்*
*தமிழார்வ முடையான் என்றும்*
*ஆக்கம்வளர் பணிபுரியும் ஆற்றலும்நல்*
*ஆர்வமுமே உருவாக் கொண்டான்*
*நோக்கமெலாம் கல்விநலம் வளர்ப்பதுவே*
*யெனக் கொளுநுண் ணுணர்வின் மிக்கான்*
*ஏக்கமென்ப தறியாதான் இவனெனச்சொல்*
*எழில்நலத்தன் இனிய நண்பன்.*

*3. பலகலையும் பயின்றுணர்ந்த பண்பாளன்*
*அன்பாளன் பாரோர் போற்றும்*
*நிலையுடைய* **சான்றாண்மைக் கிலக்கியமாய்**
*நிலவுபுகழ்க் குரிசில் நெஞ்சின்*
*நலமொன்றே பெருஞ்செல்வ மெனக்கொண்டு*
*நாடுமகிழ் நலத்தால் நாளும்*
*புலவருள மகிழ்கூர வேண்டுவன*
*புரிந்துவக்கும் புலமைச் செல்வன்.*

*4. ஆங்கிலமும் செந்தமிழும்* **அறிவியலும்**
**பயின்றுணர்ந்த** *அறிவன் கல்வி*
*ஓங்கிவளர்* **துறையூரில்** *உயர் நிலைப்பள்*
*ளியின் தலைமை யாசா னாகி*
*பாங்கினுளார் பாராட்ட மாணவர்கள்*
*நன்முறையிற் பயிலச் செய்தான்*
*யாங்குமிவன் அறிவியல்நூல் பயிற்றவல்லான்*
*எனப்புகலும் ஏற்றம் பெற்றான்.*

*5. ஆசிரியப் பயிற்சிபெற விழைவோருக்*
*காமுறையின் அறிவு நூல்கள்*
*மாசிரியப் பயிற்றிவளர் மாணவர்கள்*
*மதிநலத்தால் வளம்பெற் றோங்கத்*
*தேசுமிகு நூலியற்றித் தேர்ச்சிபெறச்*
*செய்துவக்கும் திறத்தான் 'யார்க்கும்*
*ஆசிரியன் இவன்' என்ன அறிஞரெலாம்*
*பாராட்டும் ஆற்றல் வாய்ந்தான்.*




*6.* *நகரத்தார் எனும் வணிகர் வாழ்காரைக்*
*குடியின்கண் நாடு வாழப்*
**பகரருஞ்சீர் அழகப்பர்** *நிறுவுசெழுங்*
*கலைநியமம் பலவுள் ஒன்றாய்த்*
*திகழ்தருநல்* **லாசிரியப்** *பயிற்சிதரு*
**கல்லூரி** *யாசா னாகித்*
*தகவுடனே தமிழ்பயிற்றும் முறையிதெனப்*
*பயிற்றுவிக்கும் தகைமை பெற்றான்.*

*7.* **பிறமொழியில் தோன்றிவளர் மேனாட்டின்**
*அறிவியல்நூ லனைத்தும் பேணி*
*முறைமைபெற வுணர்ந்திடநம் தாய்மொழியில்*
*மொழிபெயர்த்தல் முதற்றொண் டாமென் (று)*
*உறுதிபெற வுணர்ந்தமையால் ஆங்கிலநூல்*
*பலவற்றைத் தமிழின் கல்வித்*
*துறைவளர மொழிபெயர்த்தான் சுப்புரெட்டி*
*யெனும்பெயர்கொள் தோன்றல் மாதோ.*

*8.* *மானிடவுடலும் அணுக்கரு அமைப்பும்*
*வயங்குவா னொலித்தொலைக் காட்சி*
*ஏனைய பிறவும் உலகியல்வாழ்வில்*
*இற்றைநாள் உலவுபல் புதுமை*
*நானிலத்தமிழர் நாடொறும் உணர*
*நல்லன அறிவியல் நூல்கள்*
*தான்வரைந் தளித்தான் தமிழ்வழிஞானம்*
*தழைத்திட வேண்டுமென் றிவனே.*

*9.* *தொல்காப் பியரும் திருக்குறளும்*
*தொன்மை வளஞ்சேர் தொகைநூலும்*
*ஒல்காப் பெருமை இளங்கோவின்*
*சிலம்பும் ஒளிசேர் கம்பர்பிரான்*
*பல்காப் பியத்தின் வளங்கெழுமப்*
*பாடும் இராம காதையுடன்*
*நல்லோர் பயிலும் திருத்தொண்டர்*
*புராண முதலாம் நற்றமிழும்;*




10. *திருந்தப் பயின்றான் தமிழ்நடையின்*
*செப்ப முணரப் பலநூல்கள்*
*பொருந்த வரைந்தான் புகழுடனே*
*வாழ்ந்த புனிதர் அருள்வாழ்வும்*
*வருந்தி யுழைத்தே நாடுயர*
*வாழ்ந்த பெரியோர் வரலாறும்*
*அருந்தும் அமிழ்தாம் எனத் தமிழின்*
*அழகு திகழ வரைந்தனனால்.*

11. *நாடும் மொழியும் உரிமைபெற*
*நல்ல தமிழ்தேர் பாரதியார்*
*பாடும் பனுவல் முதலாகப்*
*பல்லோர் பயிலும் இலக்கியமும்*
*பீடு பெறுமவ் இலக்கியத்தின்*
*பெற்றி காணும் திறனாய்வும்*
*தேடி யரிதிற் கற்போர்க்குத்*
*தெவிட்டா விருந்து படைத்தனனே.*

12. ***காலமும் கவிஞர் வாழ்வுங்***
*கருதுறு பொருளுந் தேர்ந்தே*
*ஏலவே இலக்கி யங்கள்*
*இயல்பினால் தோன்றும் மாட்சி*
*ஞாலத்தார் உணரும் வண்ணம்*
*நல்லன பலநூல் செய்தான்*
*சீலத்தால் மாந்தர் வாழ்வு*
*செம்மையிற் றிகழு மாறே.*

13. *தமிழ்பயிற் றும்முறை தந்த*
*தண்டமிழின் ஆசிரியன்*
*அமிழ்தனைய கவிதையையும்*
*பயிற்றும்முறை அறிவித்தான்*
*இமிழ்திரைசூழ் ஞாலத்தின்*
*இயல்புணர்த்தும் அறிவியலை*
*அமைதிபெறப் பயிற்றுமுறை*
*யிதுவெனவும் அறிவித்தான்.*




14. திருவேங் கடவன் திருப்பெயரால்
திகழ்பல் கலைதேர் கழகத்துத்
தெளிதீந் தமிழின் துறைவளர்க்குஞ்
சீரார் தலைவ னாகியங்கே
உருவார் புலமைப் பணிகள்பல
ஊக்க முடனே செய்துவந்தான்
உயர்ச்சி பெறநன் மாணவரை
யுருவாக் கிடுநற் பேராசான்.

15. அருள்சே ருளத்தின் ஆழ்வார்கள்
அருளிச் செயலில் உளந்தோய்ந்தே
ஆய்வின் திறத்தால் முனைவர்பட்டம்
அளிக்கப் பெற்றான் அறிவியலின்
பொருள்சேர் கலைகள் தமிழ்மொழியிற்
பொலிந்து விளங்க மொழிபெயர்த்தே
புதிய நூல்கள் பலவியற்றிப்
புலமைப் பணிசெய் புகழாளன்.

16. மக்கள் வாழ உலகியல்நூல்
மட்டும் போதா வென்றுணர்ந்து
மன்னு தமிழில் முன்னோர்செய்
அருள்நூல் வழக்கும் வேண்டுமெனத்
தக்க வகையில் ஆழ்வார்கள்
அருளிச் செயலின் தகையுணர்ந்தே
தலத்தின் பெருமை நனிவிளங்க
நூல்செய் தளித்த தாளாளன்.
நக்கன் அருள்சேர் நாயன்மார்
நவிலும் திருப்பாட் டருள்நலத்தை
நாடுமகிழ விரித்து ரைக்கும்
நல்ல பணியுஞ் செய்வனென
மிக்க நாவுக் கரசர்தமிழ்
வீறு விளங்க நூல்செய்தான்
மேன்மை திகழும் சுப்புரெட்டி
யெனும்சேர் பெற்ற வித்தகனே.




*17. சீரார் காழிப் பிள்ளையார்*
*திகழ்பே ரன்பால் அப்பரெனச்*
*செப்பும் திருநா வுக்கரசர்*
*சீர்த்தி மிக்க வரலாறும்*
*பாரோர் வாழ நாவரசர்*
*பரிவால் திருவாய் மலர்ந்தருளும்*
*பதிகப் பாடற் பொருள்நலமும்*
*பண்பார் தலத்தின் வரலாறும்*
*ஆர்வ முடனே கற்போர்கள்*
*அறிந்து மகிழத் தக்கவண்ணம்*
*அறமார் நாவுக்கரசரெனும்*
*ஆய்வு நூலை அளித்ததனால்;*
*சோர்வி லாமல் தமிழ்ப்பணிசெய்*
*தோற்ற முடையான் கற்றோர்கள்*
*சுப்பு ரெட்டி யாரெனும்பேர்*
*செப்ப விளங்கும் தூயோனே.*

*18. மாலோன் அருளின் ஆழ்வார்கள்*
*மூழ்கித் திளைத்து வாய்மலர்ந்த*
*நாலா யிரமும் முன்னோர்கள்*
*நவின்ற உரையின் நயப்பாடும்*
*ஏல வுணர்ந்தே கற்போர்கள்*
*இன்ப முறவே உரைநடைநூல்*
*சால வரைந்தான்* **திருத்தலத்தின்**
*பெருமை பலவுஞ் சாற்றினான்.*

*19. ஞாலமெலாம் உய்யவரும்*
*நம்பியா ரூரரெனும்*
*ஆலால சுந்தரனார்*
*வரலாறும் அம்மைமுலைப்*
*பாலார்ந்த பிள்ளையார்*
*தேவாரப் பாநலமும்*
*மேலாய வாசகத்தேன்*
*சுவைநலமும் விரித்துரைத்தான்.*

*20. பெருமை சிறுமை கருதாது*
*பேரன் புடனே யாவரொடும்*
*நெருங்கிப் பழகும் நீர்மையினான்*
*நின்ற சொல்லும் நேர்மையினான்*
*கருமை விரவா நெஞ்சத்தான்*
*கற்றோர் தமக்கே தன்பணியை*
*உரிமை செய்யும் உவப்புடையான்*
*உயிரோ ரன்ன கேண்மையினான்.*

*21. அயரா முயற்சி யாலறிவால்*
*வறுமை அகற்றும் ஆற்றலான்*
**செயிர்தீர் நட்பால் அன்பரொடு**
**சேர்ந்து பழகும் தெளிவுடையான்**
*மயர்வில் மனத்தான் மதிநலத்தால்*
*மக்கள் சுற்றம் மகிழ்கூரத்*
*துயர்தீர்ந் துலகம் வாழச்செய்*
*தூயோன் நேயம் மிக்குடையான்.*

*22. வையத்தின் வாழ்வாங்கு மனையறத்தில்*
*இன்பமுற வாழ்ந்து மக்கள்*
*செய்யத்தகும் அறங்கள் விருந்தோம்பல்*
*முதலாகச் செய்யும் சீரான்*
*தெய்வத் திருத்தலங்கள் பலவணங்கி*
*அருளாளர் செய்யும் வாய்மை*
*உய்வைத் தரவுரைந்தான் மனைமக்கள்*
*சுற்றமுடன் உவந்து வாழி!*

*23.* **வாழிசுப்பு ரெட்டியார்** *மனைமக்கள் சுற்றமுடன்*
*வாழிதமிழ் வளர்த்து வாழியரோ - ஏழிசைநேர்*
*நல்லதமிழ் நுகர்ந்து நாடு வளம்பெறவே*
*செல்வமுடன் வாழி சிறந்து.*

* * *










*ஞான சம்பந்தர்*

**Gnanasambandhar**

*திருமதி* **சௌந்தரா கைலாசம்**

***அவர்கள் அன்புடன் உவந்தளித்த***

## நெஞ்சினிமை நிறைந்து வர நிலைத்து வாழி!

*1. யுகமுடிவில் பெருக்கெடுத்த ஊழி வெள்ளம்*
*உலகழிக்கச் சீற்றமுடன் எழுந்த வேளை*
*புகலருளும் பேரிறைவன் உறைந்த கோயில்*
*பொன்றாமல் தோணியென மிதந்த தாலே*
*சகமுழுதும் கொண்டாடிப் பெருமை சேர்க்கும்*
*தலமான சீகாழி யதனைப் பற்றிப்*
*புகல்வதற்கு மொழியுண்டோ? வார்த்தை உண்டோ?*
*பூதலத்தில் இணையான பதிப்பும் உண்டோ?*




2. வெள்ளத்தில் தோணியென மிதந்த கோயில்
வீற்றிருக்கும் முதலிறையாம் தோணி யப்பர்
பள்ளத்தில் வீழ்ந்துதுயர்ப் பட்டு மாளும்
பாருலக மானுடரைக் கரையிற் சேர்க்க
உள்ளத்தில் அருள்பொங்கி ஞானச் செல்வம்
ஊட்டுகிற குருவாகக் காட்சி நல்கும்
கொள்ளையெழில் திருப்பதியாம் காழி நோக்கிக்
கும்பிட்டால் அதுபோதும்; வினைகள் போகும்!

3. அத்தகைய காழியிலே வேதம் ஓதும்
அந்தணரில் சிறந்தவராய்த் திகழ்ந்து நின்ற
உத்தமராம் சிவபாத இருத யத்தார்,
உற்றதுணை பகவதியார், உள்ளம் ஒன்றி
நித்தியனை எப்பொழுதும் நெஞ்சில் தாங்கி
நெறிசிறிதும் பிறழாமல் அறங்கள் போற்றி
எத்தகைய குறையுமிலா துலகில் சைவம்
ஏற்றமுற வேண்டுமென வாழ்ந்தி ருந்தார்.

4. வேதநெறி தனைவளர்க்கும் அன்பு மைந்தன்
வேண்டுமென இருவருமே இறையை வேண்ட
ஆதிமுதற் பொருளான ஈசன் நல்ல
அருள்காட்டி வரம் தந்தான்; கோள்கள் எல்லாம்
ஆதரவாய் அமைந்துள்ள வேளை தன்னில்,
ஆதிரையில், ஆளுடைய பிள்ளை நல்லார்
பேதமிலாத் தம்பதியர்க் குலகில் என்றும்
பெருமைதரும் மகவாக அவத ரித்தார்!

5. எவருக்கும் பிறவாத பிள்ளை தன்னை
ஈன்றெடுத்த பெற்றோர்கள் மகிழ்வில் துள்ள,
அவருடைய சுற்றத்தார் அழகு பொங்கும்
அருமகவை நிதம் வாழ்த்தி உவகை கொள்ள,
புவனமதில் வாழ்கின்ற உயிர்கள் இன்பப்
பொழிலதனில் திளைத்தாடிப் பூரிப் பெய்த,
சிவனவனின் அருட்பரிசாய், அமுத ஊற்றாய்த்
திருஞான சம்பந்தப் பிள்ளை வாழ்ந்தார்.




*6. பெற்றெடுத்த அன்னைபக வதியார் மிக்கப்*
*பிரியமுடன் முலைப்பாலை ஊட்டும் காலை*
*சிற்பரனின் திருப்பாதம் எந்தப் போதும்*
*சிந்திக்கும் அன்பினையும் கலந்து தந்து*
*குற்றமெலாம் தீர்ந்துவிடும் நீறை மட்டும்*
*கோலமிகும் திருநுதலில் காப்பாய் இட்டு*
*நற்றவத்தின் தடத்தினிலே நடைப யிற்றி*
*நாள்தோறும் நலம்பெருக வளர்த்தி ருந்தார்!*

*7. கையூன்றிக் கால்மடித்துத் தலைய சைத்துக்*
*களங்கமிலாச் செங்கீரை ஆடும் தோற்றம்,*
*"பொய்யூன்றிப் பாழ்பட்டுக் கிடக்கும் இந்தப்*
*பூவவுலகம் நன்மையுறப் புன்மை மாய,*
*மெய்யூன்றும் பெருமழுவார் தொண்டை அல்லால்*
*வேறேதும் ஒப்புகிலேம்" என்று சொல்லித்*
*தெய்வநெறி வளர்ப்பதுவாய்த் தெரியக் கண்டு*
*திகட்டாத ஆனந்தத் தேனை உண்டார்!*

*8. பிள்ளையவர் இருகரமும் சேர்த்த வண்ணம்*
*பேரழகாய்ச் சப்பாணி கொட்டும் தோற்றம்*
*கொள்ளைநலம் தரும்சைவ நெறியை அன்றிக்*
*கொள்வதிலை வேறோன்றை என்ப தேபோல்*
*உள்ளமதில் பெற்றோர்கள் உணர்ந்து கொண்டார்!*
*ஒப்பரிய மகிழ்ச்சியெனும் இமயம் சென்றார்!*
*எள்ளளவும் குறையின்றி எந்த நாளும்*
*எழில்விழியின் இமையாகக் காத்தி ருந்தார்!*

*9. ஈரகவை கடந்துவிட மூன்றாம் ஆண்டும்*
*இசைவாக நடைபோடத் தொடங்கும் போது*
*சீருடைய பிள்ளையினைப் பெற்ற தாதை*
*சிவபாத இருதயர்ஓர் தினத்தில் ஓங்கும்*
*பேருடைய பிரமபுரக் கோயிலுக்குள்*
*பிரமநறுந் தீர்த்தமதில் ஆடப் போந்தார்.*
*ஆர்வமுடன் ஆளுடைய பிள்ளை யாரும்*
*அவரோடு திருக்கோயில் சென்ற டைந்தார்.*



*10. புனிதமிகு தீர்த்தத்தின் கரையில் அன்பு*
*பொங்கிவரப் பிள்ளையினை அமர்த்தி ஐயன்*
*மனம்ஒன்றி அகமருட மந்தி ரத்தை*
*மாசறவே ஓதுதற்கு நீருள் ஆழ்ந்தார்*
*முனம்உலகில் பிறந்திட்ட நினைவு மீண்டும்*
*மூண்டுவரப் பிள்ளையவர் வதனம் வீங்க*
*இனிமைமிகு குரல்காட்டி "அம்மை அப்பா"*
*என்றழுதார் திருக்கோயில் விமானம் நோக்கி.*

*11. பிள்ளையவர் அழுங்குரலைச் செவியில் கேட்ட*
*பிரமபுரத் தீச்வரனார் உமையை நோக்கி*
*வள்ளத்தில் முலைப்பாலைச் சிறிது வாங்கி*
*வாடியழும் குழந்தைக்கு வழங்கச் சொல்ல,*
*உள்ளத்தில் தாயாகிப் பொற்கிண் ணத்தில்*
*உயர்வுதரும் சிவஞானம் குழைத்த பாலை*
*கிள்ளைமொழித் திருநிலைநா யகியாள் தந்தாள்!*
*கிட்டாத பெரும்பேற்றைப் பெற்றார் பிள்ளை!*

*12. சிற்றெறும்பு பக்கத்தில் ஊர்ந்து விட்டால்*
*தேள்கொட்டி விட்டதுபோல் நடுக்கம் கொண்டு*
*பெற்றவொரு பிள்ளையினைப் பெண்ணொருத்தி*
*பெட்டகத்துப் பொற்குவையாய்க் காப்பாள் என்றால்*
*முற்றுகிற அன்பாலே உலகை ஈன்ற*
*முதல்வியவள் தெருப்பிள்ளை அழுத வேளை*
*உற்றவொரு தாய்மைநலம் உளத்தில் பொங்க*
*ஓடிவந்து காப்பதிலே விந்தை என்ன?*

*13. ஒப்பரிய தாய்மைநலம் உள்ள தால்தான்*
*உலகமெலாம் தழைக்கிறது! நாட்கள் எல்லாம்*
*செப்பரிய விதமாக ஓங்கி நிற்கும்*
*சிறப்பதனை அடைகிறது! கவிழ்ந்து போகாக்*
*கப்பலிலே பயணித்து வாழ்க்கை என்னும்*
*கடல்கடக்கச் செய்கிறது! மக்கள் காணும்*
*சொப்பனத்தை நனவாக்கிக் கையில் தந்து*
*சுகம்பெருக்கி நிற்கிறது! வாழ்க தாய்மை!*

*14. தாயுமையாள் அருளூறித் தந்த பாலைத்*
*தன்பசிக்கு மருந்தாக உண்ட பிள்ளை*
*வாயினிரு மருங்கினிலும் பால்வ ழிந்து*
*வருவதனைத் தந்தையவர் வெகுண்டு நோக்கி,*
*ஆய்வின்றி, அப்பாலைத் தந்தார் யாரென்*
*றரும்மகவைக் கோலொன்றால் அடிக்கப் போக,*
*நேயமிகும் மகவதுவோ விரலாற் சுட்டி*
*நில்மலனாம் தோணியுரத் திறையைக் காட்டும்!*

*15. ‘தோடுடைய செவியன்’ எனத் தொடங்கு கின்ற*
*தூயதமிழ்ப் பாட்டிசைத்து ஞானப் பிள்ளை*
*பீடுபெற விளங்கியவோர் நிலைமை கண்டு*
*பெற்றெடுத்த தந்தையவர் வியப்பில் ஆழ்ந்தார்!*
*ஆடுகிற சிவபெருமான் தாளைப் பற்றும்*
*அருள்நெறியைத் தமிழிசையால் பரப்பு தற்கு*
*நாடுபல வலம்வந்து தொண்டு செய்யும்*
*நல்லவரைப் பெற்றதனால் உவகை சூழ்ந்தார்!*

*16. தெய்வநெறி, சைவநெறி உலகம் எங்கும்*
*திகழ்ந்தினிது பரவுதற்கு நாளும் தொண்டு*
*செய்ததிரு ஞானசம் பந்தர் வாழ்வைச்*
*சிறப்பாக ஆய்ந்தினிய தமிழ்நூ லாக்கி*
*வையமெலாம் பயன்எய்த வழங்கு கின்ற*
*மாண்புடைய ஆசிரியர் அவரைப் பற்றிக்*
*கையகலத் தாளுக்குள் எழுதப் போமோ?*
*களித்தமிழில் அடங்கிடுமோ கவின்கள் எல்லாம்?*

*17. சுப்புரெட்டி யாரென்று சொல்லும் போதே*
*சகமான சுவைமிக்க தமிழ்ம ணக்கும்*
*ஒப்பரிய ஆராய்ச்சித் திறன்கள் மிக்க*
*உயர்வுடைய நூல்களின்நற் சங்கொ லிக்கும்!*
*செப்பமுள சிந்தனையின் ஆழத் துள்ளே*
*திகழ்ந்தொளிரும் முத்தான கருத்துப் பூக்கும்!*
*கப்புகிற இருள தனை விலக்கி வைக்கும்*
*காரியங்கள் அகலாமல் கால்ப திக்கும்!*

18. முத்துமணி ரத்தினங்கள் கோத்த தேரில்
முடியாத அழகதனைக் கொலுவி ருத்தி
எத்திசையும் புகழ்விளங்கப் பவனி செல்லும்
ஏற்பாட்டைச் செய்யுமொரு வேந்த னைப்போல்
மெத்தஎழில் விளங்குகிற கருத்துத் தேரில்
மேலான இலக்கியத்தை அமரச் செய்து
புத்தொளியை நாற்புறமும் பரவ விட்ட
பூந்தமிழர் திரு.சுப்பு ரெட்டி யார்தான்!

19. திருமாலை நெஞ்சத்தில் நிறைத்தி ருப்பார்!
சிவனாரை எக்கணமும் நினைத்தி ருப்பார்!
ஒருகாலும் பிறர்போற்றும் மதத்தை, வாழ்வை
உள்ளத்தில் குறைவாகக் கருத மாட்டார்!
சருகாக உலகத்தில் வாழ்வோர் மீண்டும்
தழைக்கின்ற வழிகாண முயற்சி செய்வார்!
கருகாமல் காயாமல் அறிவுக் கன்று
கற்பகமாய்ச் செழித்தோங்க வகைகள் காண்பார்!

20. துறையூருக் கருகினிலே கோட்டாத் தூரில்
தூயர்திரு நல்லப்ப ரெட்டி யாரும்
உறுதுணையாம் காமாட்சி அம்மாள் தாமும்
உளம்கலந்து நிதம்வாழ்ந்த குடும்ப வாழ்வில்
இறைவனவன் அருள்பூக்க இன்பம் சேர்க்கும்
எழில் மகவாய்ச் சுப்பு ரெட்டி யார்பிறந்தார்!
கறையறியாப் பாதையினைப் பெற்றோர் காட்டக்
காலமெலாம் அவ்வழியே நடக்க லானார்!

21. ஏணியென வறுமையினை இளமை வாழ்வில்
ஏற்றுக்கொண் டயராமல் உயரச் சென்றார்!
சாணையென நூல்களினால் அறிவைத் தீட்டித்
தக்கபல பரிசுகளைப் பெற்றுக் கொண்டார்!
பூணுகிற பதவிஎது வான போதும்
புகழ்பெருகும் விதமாகச் செயல்கள் செய்தார்
ஆணவமே இல்லாமல் அமைதி சார்ந்த
அன்பொளிரும் நல்லகத்தை உடைமை பெற்றார்!




22. பெருமைமிகு துறையூரில் நிலக்கி ழாரின்
பேரோங்கும் பள்ளியிலே தலைமை தாங்கி
அருமைமிகு கல்வியினை இளஞ்சி றார்கள்
அறிந்துணர ஊக்கமுடன் தொண்டு செய்தார்!
தருமமிகு திருக்காரைக் குடியில் கல்வி
தனைப்பயிற்றும் ஆசிரியர் பயிலு கின்ற
ஒருபெரிய கல்லூரி யதனில் வாழ்வை
உணர்த்துகிற தமிழ்த்துறையின் தலைமை பெற்றார்!

23. திருப்பதியில் வேங்கடவன் பேரைக் கொண்டு
திகழ்ந்திடுபல் கலைக்கழகம் தன்னில் இன்பம்
வரப்புரியும் செந்தமிழை வளப்ப டுத்தும்
வாய்ப்பான நற்றுறையின் தலைமை ஏற்றுக்
கருத்துயரச் செயலுயரச் சிந்தை முற்றும்
கரும்பான தமிழமுதம் உயர்ந்து பொங்க,
திருத்தமுறும் பலபணிகள் ஆற்றி நின்ற
திருவுடையார் அறிவுடையார் திறமை மிக்கார்!

24. அரியகலைக் களஞ்சியத்தைப் பதித்து நல்கும்
ஆசிரியர் குழுவதனில் முதன்மை தாங்கி
உரியபல சிறப்புடைய நூல்கள் தம்மை
ஊன்றிநிதம் படித்தாய்ந்து முடிவு செய்து,
பெருமையுற வெளியிட்டுத் தமிழன் னைக்குப்
பெரிதான புகழாரம் தேடித் தந்த
ஒருதமிழர்! உயர் தமிழர்! உலகம் யாவும்
உளமாரப் புகழ்ந்தேத்தும் உண்மைத் தொண்டர்!

25. கணக்கற்ற அவைகளிலே பங்கு கொண்டு
கலைவளரப் பேருதவி புரிவார்! அன்பு
மணக்கின்ற மனம்தாங்கி நாடு முற்றும்
வலம்வந்து தீந்தமிழை ஆய்வார்! தெய்வ
அணுக்கத்தில் எப்போதும் இன்பம் காணும்
ஆசையுடன் நல்வாழ்க்கை வாழ்வார்! தூய
குணக்குன்றாய், அருட்குன்றாய், கொள்கைக் குன்றாய்
குறையற்ற நலக்குன்றாய்த் திகழ்வார்! வாழி!




26. அவரெழுதித் தந்திருக்கும் நூல்கள் தம்மை
அளவிடுதல் எளிதில்லை! சொல்லப் போனால்
நவநிதியக் குவியல் அவை! மதிக்க ஒண்ணா
நலமருளும் நதிகள் அவை! சூழ்ந்து மாய்க்கும்
பவவினையின் இருளதனை விலக்க வந்த
பகலவனின் கதிர்களவை! வாழ்வு நல்கும்
தவத்தின் உயர் மலைகள் அவை! என்று போற்றத்
தக்கவிதம் விளங்குவன! தந்தார் வாழி!

27. அறிவியலை அவரறிவார்! இலக்கி யத்தை
ஆராயும் வகையறிவார்! வளமை கொள்ள
உறுதுணையாய் யாவர்க்கும் உதவு கின்ற
உளவியலும் தெளிவுறுவார் நாட்டில் உள்ள
சிறுவர்களை இளைஞர்களைப் பயிற்று விக்கும்
திறனறிந்து செயல்புரிவார்! இவற்றின் மேலாய்
இறையுணர்வில் தமையிழந்த பெரியோர் வாழ்வை
எழிலமுதத் தமிழ்மொழியில் தருவார்! வாழி!

28. இவ்வகையில் அவர்தந்த ஞானசம் பந்தர்
எனும்அரிய நூலதனைப் படித்த போதில்
செவ்வையுற விளக்கும்அரும் கருத்த னைத்தும்
சிந்தையிலே ஒளிகாட்டித் திகழக் கண்டேன்!
கொவ்வைமலர் வாயிதழாள் உமையி னோடு
குலவுகிற சிவபெருமான் எதிரில் தோன்றி
உய்வகையைக் காட்டுகிற உணர்வைப் பெற்றேன்!
ஓங்குகிற சிவநெறியின் உயர்வைக் கண்டேன்!

29. மதுபோன்ற பூந்தமிழின் இனிமை காட்டி
மதிநுட்ப ஒளிகாட்டி மகிழ்வை ஊட்டும்
இதுபோன்ற பலநூல்கள் யாத்து மாந்தர்
இறையருளைத் துய்க்கின்ற வழியும் காட்டப்
பொதுமன்றில் நடமாடும் ஈசன் அன்பு
பூத்தருளைத் திருசுப்பு ரெட்டி யார்க்கு
நிதம்வழங்கி நின்றிடுவான்! நீண்ட காலம்
நெஞ்சினிமை நிறைந்துவர நிலைத்து வாழி!




*30. சித்தமதில் எப்பொழுதும் இறையைத் தாங்கித்*
*திகழ்வுடைய நறுந்தமிழில் தெளிவு மிக்க*
*புத்தகங்கள் புதுமையுற எழுதி இந்தப்*
*புவியினர்க்கு வழங்கிஉயர் புகழ்கு விக்கும்*
*வித்தகராம் திரு. சுப்பு ரெட்டி யார்க்கு*
*மேன்மைகளும் வளமைகளும் மிகுந்து சேர*
*அத்தனவன்அருளமுதம் பொழிவான்! நீண்ட*
*ஆயுளுடன் அப்பெரியார் இனிது வாழி!*

**நாதன் தாள் வாழ்க. !**







## ஆழ்வார்களின் ஆரா அமுது
## Aazhvarkalin Aaraa Amudhu

*கவிஞர் நாரா. நாச்சியப்பன்*
*(நாவல் ஆர்ட்ஸ் பிரிண்டர்ஸ்),*
*137, ஜானிஜான்கான் சாலை, சென்னை - 600 014)*

**அவர்கள் அன்புடன் உவந்தளித்த**

## சிறப்புப் பாயிர மாலை

*1.* அண்ணலை மேக வண்ணன்
ஆகிய பெருமாள் தன்னை
எண்ணியே நாளும் நெஞ்சில்
இருத்தியே அன்பில் ஆழ்ந்து
நண்ணியே நின்ற தாலே
நலமுற ஆழ்வார் என்று
திண்ணமாய்ப் போற்றப் பெற்றார்
செல்வர்பன் னிருவர் தாமே!




2. துன்பங்கள் சூழ்ந்த போதும்
துயரிலே ஆழ்ந்த போதும்
அன்பிலே தாழ்ந்த தில்லை
அரவணை யானைப் போற்றும்
இன்பமே இன்ப மென்றே
இணையிலா வாழ்வு கண்டு
மன்பதைக் கெடுத்துக் காட்டாய்
வாழ்ந்தவர் ஆழ்வார் ஆவார்!

**பொய்கையாழ்வார்**

3. தாமரைப் பூவில் தோன்றித்
தமிழிலே நூறு பாட்டுக்
காமுறும் வண்ணம் சொன்ன
கவிஞரைப் பொய்கை யாழ்வார்
ஆமெனச் சொல்லும் வையம்
அவர்முதல் திருவந் தாதி
தேன்மலர் மாலை போலும்
திருச்சுடர் ஆழி யாற்கே!

4. சங்கமே குழந்தை யாகித்
தாமரைப் பொய்கைப் பூவில்
தங்கியே பிறப்பெ டுத்துத்
தமிழிலே பெருக்கெ டுத்து
வங்கமே நிறையு மாறு
வடித்தநற் சொல்லின் மாயை
இங்கொரு திருவந் தாதி
இணையிலாத் தெய்வப் பாட்டே!

**பூதத்தாழ்வார்**

5. மாதவிப் பூவில் தோன்றி
மாநிலங் காப்பான் மீது
காதலை வைத்தி ரண்டாம்
கவினுறு திருவந் தாதி
ஓதிய கவிஞர்; ஞான
ஒளிவிளக் கேற்றி வைத்தார்
பூதத்தாழ் வாரே! கண்ணன்
பொன்னடிக் காட்பட் டாரே!




6. கார்நிறப் பெருமாள் கையின்
கதையதே பிள்ளை யாகிச்
சேர்ந்தது பூவில் என்று
செப்புமோர் மரபுண் டாமே!
நேர்தமிழ்ப் பூதத் தாரின்
நிகரில்அந் தாதிப் பாடல்
யார்படித் தாலும் தோன்றும்
அறிவெனும் ஒளிப்பெ ருக்கே!

**பேயாழ்வார்**

7. செவ்வல்லிப் பூவில் தோன்றித்
திருப்பொன்னின் மேனி யோடு
பவ்வத்து நீலந் தானும்
படிந்ததோர் வண்ணங் கண்டே
ஒவ்வொன்றாய் நூறு பாட்டுத்
தொடருமுன் றாம்அந் தாதி
செவ்வையாய்ப் பாடி வைத்த
சேவையார் பேயாழ் வாரே!

8. வாளொரு கூறாய் வந்து
வடிவுறு பூவில் தங்கி
நாளொரு மேனி யாக
நலமுற வளர்ந்து நின்று
ஆளுறு போது நெஞ்சம்
அழிந்துகண் சுழன்று பேய்போல்
நீளுற நகைத்துப் பாடி
நின்றுபேய் ஆழ்வார் ஆனார்!

**திருமழிசையாழ்வார்**

9. தேவனை யாழி யானைத்
திருச்சந்த விருத்தம் பாடிப்
பாவனை செய்து போற்றும்
மழிசையார்; தேனைச் சிந்தும்
நாவினாற் சொல்லிப் போந்த
நான்முகன் திருவந் தாதி
பூவினும் எழில தாகும்!
புதுமணம் பொலிவ தாகும்!




10. ஆழியின் கூறாய்த் தோன்றி
அழகிய பிள்ளை யாகிப்
பாழுறு சமயந் தோறும்
பல்கலை நூல்கள் ஆய்ந்து
வாழுறப் பக்தி யொன்றே
வழியெனக் கண்டு கொண்டே
ஏழிசை பாடிப் பாடி
இறைவனை ஏத்தி நின்றார்.

**நம்மாழ்வார்**

11. திருக்குருகூர்ச் சடகோ பன்சொல்
திவ்வியப் பிரபந் தங்கேட்(டு)
உருகாத நெஞ்சும் உண்டோ?
உலகெலாம் உடைய மூர்த்தி
திருப்பேறு வேண்டி வேண்டித்
திருவாயின் மொழிகள் யாவும்
உருப்போட்டு வந்தாற் போதும்
உய்யலாம் ஞாலத் துள்ளே!

12. தாய்முலைப் பாலுண் ணாமல்
தானாக வளர்ந்த பிள்ளை
பேய்முலைப் பாலை யுண்ட
பிள்ளையின் சீர்த்தி போற்றித்
தூயநான் மறையின் சாரம்
தொகுத்துநற் றமிழில் தந்த
ஆயிரம் மீறிப் போன
அழகுறு கவிகள் தாமே!

**மதுரகவியாழ்வார்**

13. உய்யவே சடகோ பன்சொல்
ஒவ்வொன் றும் போற்றி வாழ்ந்த
மையிலார் அடியார்க் கன்பர்
மதுரநற் கவியார் அன்பின்
மெய்யினை யுள்ளுந் தோறும்
மேனிலை தோன்றும் இந்த
வையகம் திருந்தி வாழ
வளர்ந்திடும் இன்பந் தானே!




14. *சித்ததின் வயிற் றிருந்து*
*சிறுகுட்டி தான்பி றந்தால்*
*எத்தைத்தின் றெங்கி ருக்கும்*
*என்றதோர் கேள்வி யாலே*
*அத்தைத்தின் றங்கி ருக்கும்*
*அதுவென்ற பதிலைப் பெற்றுத்*
*தத்துவப் பொருள்உ ணர்ந்து*
*'தாம்பு' அருள் கவிதை மன்னன்!*

### குலசேகராழ்வார்

15. *திருவஞ்சிக் களத்து மன்னர்*
*குலசேக ராழ்வார்; மூத்த*
*பெருமாளின் பித்தர்: சீதை*
*பிடியுண்ட கதையைக் கேட்டுப்*
*பொருமியே போர்க்கெ ழுந்தார்*
*பொசுக்குவேன் இலங்கை யென்று*
*கருவியே படை யெடுத்துக்*
*கடலிலே இறங்கிச் சென்றார்!*

16. *அடியவர் திருட ராகார்*
*அதனைமெய்ப் பிக்க வென்றே*
*கொடியபாம் படைந்தி ருக்கும்*
*குடத்தினுள் கையை விட்டுப்*
*படிமிசை உண்மை நாட்டிபி*
*பக்தரின் மேன்மை காட்டி*
*அடியவர்க் கடிய ராகி*
*அறுபத்தே ழாண்டு வாழ்ந்தார்!*

### பெரியாழ்வார்

17. *பூமாலை கட்டி வில்லிப்*
*புத்தூரான் மகிழச் சூட்டிப்*
*பாமாலை யாத்தும் அந்தப்*
*பரமனை வணங்கி நிற்பார்*
*மாமாலை சூடித் தந்த*
*மங்கையை வளர்த்த தந்தை*
*ஆமாமாம் பெரிய ஆழ்வார்*
*அவர்பெரும் புலவர் ஆவார்!*




*18. பல்லாண்டு பாடிப் பாடிப்*
*பாதாதி கேசம் பாடிச்*
*சொல்லாண்டு கண்ணன் பேரில்*
*சுவைகூட்டும் தமிழைப் பாடி*
*வல்லானைப் பிள்ளை யாக்கி*
*வளர்க்கின்ற தாயும் தானாய்ச்*
*சொல்லார அன்பு தேக்கிச்*
*சுடர்க்கவி பாடி னாரே!*

**ஆண்டாள்**

*19. தனக்கொரு கணவன் வேண்டித்*
*தானேதேர்ந் தெடுத்துக் கொண்டாள்*
*வனக்குயில் ஆண்டாள் என்னும்*
*வஞ்சியாள் அரங்கத் தானை*
*மனத்திலே இன்பம் பொங்க*
*மணக்கோலம் கொண்டு சென்றே*
*நினைத்ததை நடத்திக் கொண்டாள்*
*நின்மல னொடுக லந்தாள்!*

*20. கண்ணனை மாயன் தன்னைக்*
*காதலால் ஏங்கி ஏங்கி*
*எண்ணத்துள் வைத்துக் கொண்டாள்*
*எப்போதும் அவன் நினைப்பில்*
*வண்ணங்கள் பாடி நின்றாள்*
*வளர்த்தனள் காதல் தீயை*
*கண்ணுக்குள் அவனே! காணும்*
*கனவிலும் அவனே யானாள்!*

**தொண்டரடிப் பொடியாழ்வார்**

*21. விலைமகள் வலையுள் பட்டு*
*வேதனைச் சிறையுள் பட்டு*
*நிலைதடு மாறிப் பின்னர்*
*நிமலனார் அருளி னாலே*
*அலைவிலா உள்ளம் பெற்றே*
*அடியவர்க் கடிய ரானார்*
*அலைகடல் மிதப்பான் தொண்டர்*
*அடிப்பொடி யாழ்வார் தாமே!*




*22. மாலையின் கூறாய்த் தோன்றி*
*மண்ணிலே பிறப்பெ டுத்துக்*
*கோலமா மாயன் தொண்டே*
*குறியெனக் கொண்டு வாழ்ந்து*
*சீலமே கடைப்பி டித்துத்*
*திருவடித் தொண்டர் தொண்டில்*
*ஞாலமே போற்ற வாழ்ந்த*
*நாரணப் பொடிக ளாரே!*

**திருப்பாணாழ்வார்**

*23. தீண்டாத பாண்கு லத்தான்*
*துறைவழி நிற்கக் கண்டு*
*வேண்டாத கல்லை வீசிச்*
*சாரங்க முனிவர் சென்றார்*
*ஆண்டவன் நெற்றி தன்னில்*
*அதுபட்டி ரத்தம் கொட்ட*
*மீண்டோடி வந்து தோளின்*
*மீதேற்றிக் கொண்டு சென்றார்.*

*24. சாரங்க முனிவர் மீது*
*தாமேறிக் கொண்டு சென்று*
*சீரங்க நாதன் பள்ளித்*
*திருக்கோலம் கண்ட பேற்றில்*
*ஈரங்கொள் பக்திப் பாடல்*
*ஈரைந்தை அருளிச் செய்தே*
*பாரங்கொள் வினைகள் மாயப்*
*பரத்திலே கலந்து விட்டார்*

**திருமங்கையாழ்வார்**

*25. நாலாயி ரத்தில் ஒன்றை*
*நவில்பர காலர்; அன்பர்*
*வேலாயு தத்தை ஏந்தி*
*விழிப்புடன் காத்தி ருந்து*
*மாலான அண்ணல் தன்னை*
*வழிப்பறி செய்த கள்ளர்*
*ஆலிநன் னாட்டு தித்த*
*அருட்டிரு மங்கை யாரே!*

*26. அழகுறு குமுத வல்லி*
*அமுதவாய் பருக ஏங்கிப்*
*பழகுறு மணத்தால் பற்றிப்*
*பரமனுக் கடிய ராகி*
*வழிப்பறி கொள்ளை யிட்டு*
*வருத்துமோர் நெறியை விட்டு*
*எழில்மிகு மாயன் தொண்டில்*
*இணைதிரு மங்கை யாழ்வார்!*

**சுப்பு ரெட்டியார்**

*27. தேவாரம் திருமுறைகள் சித்தாந்தம்*
*ஆகமங்கள் தேர்ந்த மேதை*
*நாவாரச் சிவனருளைப் பாடுகின்ற*
*அடியாரின் நலங்கள் பேசிப்*
*பூவாரம் சூட்டுகின்ற சுப்புரெட்டி*
*யாரென்னும் புலவர் கோமான்*
*ஆழ்வார்கள் ஆரமுதைப் படைக்கின்றார்*
*இந்நூலில் அழகு கூட்டி!*

*28. எப்போதும் திருநீறு பொலிகின்ற*
*திருமுகத்தார் இவரின் உள்ளம்*
*தப்பேதும் இல்லாத சமரசசன்*
*மார்க்கத்தில் தழைப்ப தாலே*
*முப்புரத்தை எரித்தானும் திருவரங்கத்*
*துறைவானும் முனைந்து பார்க்கில்*
*ஒப்பென்றும் ஒன்றென்றும் ஒருகடவுள்*
*தாமென்றும் உணர்ந்த மேதை!*

*29. தன்மதமே உயர்வென்று சாதிப்பார்*
*வாழுகின்ற தரணி தன்னில்*
*தொன்னூலாம் திருக்குறளின் நெறிபோற்றும்*
*சுப்புரெட்டி யாரோ தூய*
*நன்னெறியின் வழிப்படுத்தல் சமயங்கள்*
*பணியென்னும் நம்பிக் கையால்*
*பன்னூலும் கற்றிடுவார் கற்றவற்றைப்*
*பிறர்க்குரைத்துப் பயன்கொள் வாரே!*

*30. ஆறுசொற் பொழிவுகளில் ஆழ்வார்கள்*
*எட்டுப்பேர் அருமை பற்றிக்*
*கூறுகின்ற முறைநோக்கின் சுப்புரெட்டி*
*யார்சொல்லின் கூர்மை தோன்றும்*
*பேறுவகை, வளர்ந்தமுறை, சோதனைகள்*
*பரமபதம் பெற்ற வாறும்*
*வீறுகவி வெளிப்படும் இலக்கியமேம்*
*பாடும்மிக விளக்கிச் சொல்வார்!*

*31. பாடல்களில் படிந்துள்ள வேதாந்தக்*
*கூறுகளும் படிமம் தானும்*
*நீடுவழக் கத்துள்ள மரபுகளும்*
*உட்பொருளும் நினைத்துக் கூறி*
*ஏடுபடிப் பவர்க்குமுழுப் பயன்நல்கும்*
*தகவல்களும் எடுத்துச் சொல்வார்*
*பாடுபட்ட பலனெல்லாம் தருமத்தாய்*
*பரிந்தளிக்கும் பரிசு போலே!*

*32. சுப்புரெட்டி யார்வந்து நுழைந்துவிட்டால்*
*ஓரிடத்தில் சுறுசு றுப்பும்*
*கப்பென்று வந்துவிடும்; எழுபதிலும்*
*விறுவிறுப்பாய்க் கடமை யாற்றும்*
*அப்பரென்பேன்; திருநாவுக் கரையரென்பேன்;*
*எளிமையிலும் அவரே யென்பேன்!*
*இப்படியோர் தமிழாசான் கிடைத்ததுசெந்*
*தமிழ்த்தாயின் இன்பப் பேறே!*

*33. சிரிப்பள்ளித் தெளிக்கின்ற திருமுகத்தில்*
*வெண்ணீறு பொலியும் பாங்கும்*
*விரும்போடு தமிழமுதைச் சொற்பொழிவாய்*
*மன்றத்தில் விரிக்கும் பாங்கும்*
*உருப்போடும் மாணவர்கள் உணர்வோடு*
*கற்றிடவே உதவும் பாங்கும்*
*இருப்போடு வரவாகும் ஊதியம்போல்*
*பயன்மிக்க பணியின் பாங்காம்!*




*34. அறிவியலும் இலக்கியமும் கற்றவராய்*
*இருப்பதனால் அடிவு நூல்கள்*
*செறிவுள்ள தமிழ்மொழியில் திறமாகப்*
*படைத்தளித்தார்; இலக்கி யத்தில்*
*நெறியற்ற கற்பனைகள் தமைவிளக்கி*
*குறிக்கோளும் தூய்தாகக் கொள்கைகளும்*
*சீராகக் கொள்ளக் கண்டோம்!*

*35. துறையூரும் சீர்காரைக் குடிநகரும்*
*வேங்கடமும் துய்ந்த பேறு*
*குறையில்லாப் பெரும்பேறாம் சுப்புரெட்டி*
*யார்தொண்டு கொண்ட தாலே!*
*நிறைபெறவே ஓய்வுநாள் இலக்கியங்கள்*
*ஆய்வெனவே நெறிப்ப டுத்தி*
*முறையாகத் தமிழ்நாடு முழுவதற்கும்*
*பயனீந்தார் நீடு வாழ்க!*

**வாழ்த்து**

*36. தில்லைப் பதியானும் சீர்வேங் கடத்தானும்*
*இல்லைவே றொன்றாய் இருந்திங்கே-நல்ல*
*குணந்திகழும் சுப்புரெட்டி யார்க்குத் தருக*
*மணங்கமழும் பல்லாண்டு வாழ்த்து!*

* * *









*சடகோபன் செந்தமிழ்*

## Sadagopan Senthamizh

*'பாவலர் மணி', 'சித்தன்', வைணவமணி'*
*பல் மருத்துவர்*
வித்துவான் **மு. இராதாகிருஷ்ணன்**
*புதுவை*

***அவர்கள் அன்புடன் உவந்தளித்த***

## சிறப்புப் பாயிர மாலை

*1. சுகரென்னும் மாமுனிபோல் பிறந்த போதே*
*துறந்தவர்நம் சடகோபர்! அவர்தம் ஆற்றல்*
*சகந்தனிலே விரித்திடயார் சதுரர்? அந்தச்*
*சாமி, உயர் சேனையர்கோன் அவதா ரந்தான்!*
*அகந்தனிலே உன்னுதொறும் அமுதம் பெய்யும்*
*அரியதமிழ் இவர் தந்தார்! காரி மாறர்*
*பகர்ந்த தமிழ் கேட்பதற்கே ஆண்டு தோறும்*
*பத்துநாள் ஒதுக்குகிறார் அரங்கத் தண்ணல்!*




*2. வண்பொருநை யாற்றின்தென் கரையில் வாய்த்த*
*வளவயல்சூழ் திருநகரி எனும்பேர் பூண்ட*
*தண்குருகூர் நகருறையும் காரி என்னும்*
*தவமுடைய நல்லார்க்கும், பொறைக்கோர் சான்றாம்;*
*பெண்குலத்துப் புகழ்விளக்கம் உடைய நங்கைப்*
*பெருமாட்டி யாரவர்க்கும் உலகம் உய்ய*
*மண்ணிலொரு வைகாசிப் பருவ மாக*
*மலர்ந்தவிசா கத்திலிவர் அவத ரித்தார்!*

*3. அவதாரம் செய்தருளும் நாள்தொடங்கி*
*அழுததிலை, முலையுண்ணும் அவதி இல்லை!*
*தவராசன் போல்வாட்ட மின்றி, மௌனச்*
*சாமியென இவரிருந்தார்! கண்கள் மூடி;*
*இவரிருந்த நிலைகண்டே பெற்றோர் உள்ளம்*
*எய்தியதாம் துன்பத்தை எழுதல் ஆமோ?*
*நவமணியாய்க் குறுங்குடியுள் நின்ற நம்பி*
*நல்லருளும் ஈதேஎன் றயர்ந்தார் பெற்றோர்!*

*4. பொருநைத்தென் கரையினிலே பொலிந்து நின்ற*
*பூரணனின் திருவுளத்தை ஏற்றே ஆங்கோர்*
*திருப்புளியின் கிளையினிலே தொட்டில் கட்டித்*
*திருக்கண்கள் விழியாத இவரை வைத்துக்*
*குருகூர்க்கு விடைகொண்டார் பெற்றோர்! அன்றே*
*குவலயம்நல் லருள்பெற்ற பனிரண்டாம்நாள்!*
*ஒருமுனிபோல் யோகநிலை கூடப் பெற்றே*
*உணர்வொன்றிப் பதினாறாண் டிருந்தார் ஐயர்!*

*5. வடதிசைக்கண் இருக்கின்ற திருக்கோயில்கள்*
*மாண்பெல்லா மறிந்தவற்றை வணங்கச் சென்ற*
*திடமுடைய மதுரகவி அயோத்தி தன்னைச்*
*சேவித்துத் திரும்பிடுமோர் இரவு தன்னில்*
*கடலெழுந்த பகவலனின் ஒளிபோல் விண்ணில்*
*கண்டனரோர் பேரொளியைத் தெற்குத் திக்கில்!*
*“சுடர்இதுவேன்? காடெரியும் ஒளியோ? அன்றிச்*
*சுற்றியுள்ள சிற்றூர்தான் எரியும் தீயோ?”*

. எனவியந்தார்! பின்னிரண்டு மூன்று நாட்கள்
இவ்வாறே ஒளிகாட்ட "இதுவென்-தேர்வோம்"
எனவெழுந்தார்! இரவெல்லாம் நடந்து பன்னான்
எழிலரங்கம் தனையடைந்தார்! அதற்கும் அப்பால்
மனமடங்காப் பேரொளிதான் இருக்கக் கண்டு
மாமதுர கவிமீண்டும் நடக்க லானர்!
வனம், ஆறு கடந்தேபின் குருகை சென்றார்,
மற்றந்த ஒளியங்கே மறைந்த தோர்ந்தார்!

7. ஊரெல்லாம் தேடிப்பின் அனந்தாழ் வானாம்
உறங்காத புளியின்கீழ் வீற்றி ருக்கும்
மாறர்தம் யோகநிலை கண்(டு) இவர்தாம்
மானுடரன் றென்றுணர்ந்தார்! அவர்முன் னங்கோர்
சீருடைய கல்லொன்றை இட்டார், கேட்டே
திருக்கண்கள் திறந்தாராம் குருகூர் நம்பி!
நாருடைய மதுரகவி கேள்வி ஒன்றை
நயமாகக் கேட்டவர்பால் ஞானம் பெற்றார்!

8. "செத்தத்தின் வயிற்றினிலே சிறிய வொன்று
சேர்ந்துபிறந் தாலிந்த வையந் தன்னில்
எத்தைத்தின் றெங்கதுவும் கிடக்கும்?" என்ற
இனியதொரு கேள்வியினை விடுத்தார்; மாறர்
"அத்தைத்தின் றங்கேயே கிடக்கும்" என்றே
அருளினரால்! மதுரகவி கேட்டி வர்தாம்
வித்தகரென் றேஓர்ந்தார்! அவர்பொற் றாளில்
வீழ்ந்தடிய ராயவர்க்குத் தொண்டு பூண்டார்!

9. நம்பெருமாள் என்றரங்கர் தம்மைச் சொல்வர்;
நம்முடைய மாறனையும் கற்று வல்லோர்
நம்மாழ்வார் என்கின்றார் உரிமை யோடே!
நன்மகிழ மலர்மாலை சூட லாலே
நம்பிவகு ளாபரணர் என்பர் மேலோர்;
நாயகியாய்ப் பாசுரங்கள் நல்க லாலே
அம்புவியோர் பராங்குசநா யகிஎன் கின்றார்;
அருள்மாறன், சடகோபன் ஐயர் நாமம்!




10. வேதத்தில் ஒன்றான சாம வேத
விரிவுக்குள் சாந்தோக்யந் தன்னில் கண்ட
கோதற்ற "உத்" என்னும் பகுதி தன்னைக்
குலவின்பப் பாட்டாக்கி-மக்கள் உய்யத்
தீதற்ற நெறிகாட்டித் திருமால் காட்டும்
"திருவாய்நன் மொழி" யாக்கித் தந்தே, இன்றும்
ஓது "திரு விருத்த" "மொடாசிரியம்" மிக்கிங்
குயர்ந்த "திருவந்தாதி" நான்கும் தந்தார்.

11. இவரிடத்துப் பாடல் பெறத் திவ்ய தேசத்
தெம்பெருமான் பலரிவர்முன் காட்சி தந்தார்!
தவமுடையார் அறியாத சித்த சித்தில்
வரனென்னும் தத்துவநன் நெறிவி ளக்கிப்
புவிமுழுதும் வணங்குகிற சோழ நாட்டுள்
புகழ்மிக்கத் திருப்பதிகள் ஐந்தினுக்கும்
கவிதந்தார்! நால்வேதக் சுருக்காய் நிற்கும்
களிதமிழாம் இவர் தமிழும்! மற்று முள்ள

12. பாண்டியநாட் டுப்பதிகள் தம்முள் நம்மின்
பராங்குசரும் பாடியவை பன்னி ரண்டாம்!
நீண்டமலை நாட்டிலுள்ள ஆறி ரண்டு
நிறைபுகழ்கொள் விண்ணகரம் தம்மில் உள்ள
ஆண்டகையும் இவரிடத்துப் பாடல் பெற்றார்!
அடுத்துவரும் வடநாட்டுத் தலங்கள் உள்ளே
பூண்டஎழில் வேங்கடத்தை முதலாக் கொண்ட
புண்ணியநற் றலமைந்தைப் பொலியச் செய்தார்!

13. ஆழ்வார்கள் பதின்மார்களாம்! அவர்க ளுள்ளே
ஆழ்வாரென் றாலிவரைத் தான்கு றிக்கும்!
ஆழ்வார்கள் உறுப்புக்கள் என்னில் இந்த
ஆழ்வாரோ உயிராவர் என்பர் மேலோர்!
வாழ்வாகக் கருதுகிற திருமால் தன்னை
வணங்கிடவே நாம்சென்றால், ''உமக்கு வாழ்விங்(கு)
ஆழ்வாரே'' என்றவரைத் தூக்கி நாமும்
அருள்பெறவே சடாரியெனச் தலையில் வைப்பார்!




*14. ஆதித்தன் ஓர்சுடராம்! அடுத்த தான*
*அவதார இராகவனாம் பகல வன்தான்!*
*சோதியெனும் கண்ணனுமோர் கதிர்என் பார்கள்!*
*சொலுமிந்த மூவர்களும், சடகோ பர்தாம்*
*மேதினியில் செஞ்சுடராய் எழுந்த பின்னர்*
*விண்சுடர்முன் மின்மினியாய்ப் பொலிவி ழந்தார்!*
*ஓதுமவர்க் கேகாத உள்ளி ருள்தான்*
*உடையநங்கை மகனார்க்கண் டொதுங்கிற் றையா!*

*15. இங்கிவர்தம் தமிழ்கொண்டே கற்று வல்லோர்*
*எளிதாக மறைநிலங்கள் தெளிகின் றார்கள்;*
*தங்கிஅதில் உளநயங்கள், சாத்தி ரங்கள்*
*தமையெல்லாம் சான்றோர்தம் உரையுள் கொண்டார்!*
*இங்கவற்றைப் பாலைப்போல் யாரும் கொள்ள*
*எளிதாக - இனிதாக - அளித்தா ரெங்கள்*
*பொங்குபுகழ்ச் சுப்புரெட்டி யாராம் தோன்றல்;*
*புலமைமிகும் தமிழ்வலவர் இவர்யா ரென்னில்!*

*16. சிவவாக்ய ரெனும்பேர்கொள் சித்தர் இங்குத்*
*திருமழிசைப் பிரானாகி, ஆழ்வார் தம்முள்*
*யுவராச ராய்விளங்கும் தன்மை போல,*
*உவமையிலா நம்சுப்பு ரெட்டி யாரும்*
*சிவநெறியி லேநின்றும் விசிட்டாத் வைதச்*
*செந்நெறியில் ஆழங்கால் பட்டே நின்றார்!*
*நவமான வைணவநூல் பலவும் தந்த*
*நற்புலவர் இவர்ப்பற்றிச் சிலசொல் வேனே!*

**வேறு**

*17. நற்றமிழ்த் துறைகள் என்னும்*
*கடல்களைக் கடந்த நல்லார்!*
*விற்பனர் வியக்கும் வண்ணம்*
*விரிவுரை ஆற்றும் சூரர்!*
*கற்றவர் அவையை நீங்காக்*
*கல்வியர்! கவிகள் தேரும்*
*பெற்றியர்! அவைவி ளக்கும்*
*பெருமையும் பெற்ற சீலர்!*




*18. ''அருங்கலைச் கோன்'' என் கின்ற*
*அரியதோர் பட்டத் திற்கே*
*உரியவர்! கணமும் சோரா(து)*
*உழைத்திவர் உயர்வு பெற்றார்!*
*பொருளினைப் பெரிதென் றெண்ணாப்*
*புண்ணியர்! உலகம் வாழ*
*அருளினால் பன்னூல் தந்தார்!*
*ஆரிவர் திறம்தேர் வாரே!*

*19. பல்கலை ஆய்ந்து, நூல்கள்*
*பற்பல தந்து தம்மை*
*வெல்பவர் இன்றி நிற்கும்*
*மேன்மையர்! விரிந்த கேள்விச்*
*செல்வராம் இவரோர் ஆசான்!*
*செந்தமிழ் இவர்பால் கற்றோர்*
*நல்லவராய் வல்ல ராக*
*விளங்குவா நானி லத்தே!*

*20. கலைகளின் களஞ்சி யத்தைக்*
*கனிச்சுளை யாக்கித் தந்த*
*பலகலைச் செல்வர்! நல்ல*
*பதிப்புக்கள் வரஉழைத் தோர்!*
*தலைமுறை பலவும் வாழத்*
*தத்துவம் சமய மோடு*
*விலைமதிப் பில்லா நூல்கள்*
*விளக்கமாய்த் தந்த மேலோர்!*

*21. நஞ்சட கோபர் செய்த*
*செந்தமிழ் நமக்குத் தேனாய்*
*விஞ்சிய புலமை யாலே*
*விரித்தளித் துள்ளார்! அர்த்த*
*பஞ்சக மான இந்தப்*
*பண்புநூல் நுணுக்க மெல்லாம்*
*செஞ்சுடர் எனவி ளக்கம்*
*செய்துநற் றமிழர்க் கீந்தார்!*

*22. அகப்பொருள் தத்து வங்கள்,*
*அகம்கவர் தோழிப் பாக்கள்*
*தகவுடைத் தாய்ப்பாட் டின்னும்*
*தண்டமிழ்ச் சுவைகள் பொங்கும்*
*மக(ள்) அருட் பாட்டு, வேத*
*மந்திரப் பாடலெல்லாம்*
*வகையுற உரையிட் டிங்கே*
*வானமு தாகத் தந்தார்!*

*23. சித்தசித் தீச னென்று*
*செப்பிடும் தத்து வங்கள்*
*புத்தியுள் நிற்கும் வண்ணம்*
*பொலிவுறக் காட்டி, நங்கள்*
*வித்தகர் சடகோ பர்தம்*
*திருவுளம் விளங்க வைத்தார்,*
*எத்தனை தரம்உண் டாலும்*
*இனித்திடும் அமுத மொத்தே!*

*24. ''மாசறு சோதி'' தன்னில்*
*மட லெடுத் தினிமை தேக்கும்*
*பாசுரக் கருத்தை நேர்த்தித்*
*தமிழினால் பலரும் கொள்ள*
*ஆசற விளக்கம் சுப்பு*
*ரெட்டியார் ஆயி ரத்துள்*
*மீசுர மாக நின்ற*
*ஒருவராய் மேன்மை உற்றார்!*

*25. தூதெனில் மாறன் சொன்ன*
*தூதுதான் தமிழில் மேலாம்!*
*ஓதுமத் தூதில் காணும்*
*உள்ளுறை நயங்கள் தம்மைத்*
*தீதறக் காட்டி, ஞானம்*
*சிறந்தநல் லனுட்டா னங்கள்*
*மேத(கு) அப் பறவை தன்னின்*
*விரிசிற கிரண்டென் கின்றார்!*




*26.* அன்னமும் கிளியும் வண்டோ
டருங்குயில் மயில்கள் பூவை
என்னுமிப் பறவை யெல்லாம்
பறவையோ? இல்லை, இங்கே
நன்னயத் தாழ்வார் நாத
முனிக ளாசாரி யர்கள்,
முன்னைய சான்றோர் என்ற
மேலவர் முழக்கம் தானும்

*27.* இப்புவி மாந்தர் நெஞ்சில்
இடங்கொளும்; யாரும் கொள்ள
ஒப்பிலாச் சடகோ பர்தம்
உளத்தினை - அருங்க லைகோன்
எய்ப்பினில் வைப்பாய் நாட்டுக்
கீந்தவிந் நூலின் மேன்மை
செப்பிடற் குரியன் யானோ

*28.* கண்ணனைக் குருகூர் வள்ளல்
காதலால் பாடிச் சென்ற
வண்ணங்க ளாயி ரத்தின்
வகைளை அலசி, யாரும்
உண்ணுதற் கேற்ற நீராய்
உரையிடு ரெட்டி யாராம்
அண்ணலின் புகழிங் காழ்வார்
புகழுள வரையி ருக்கும்!

*29.* உலைவிலா துழைப்ப தொன்றே
உயர்நெறி யாகக் கொண்டு,
பலகலை நூல்கள் தந்த
பன்மொழிப் புலமை யாளர்
நலமிகு சுப்பு ரெட்டி
யாரெனும் நம்பிக் கிங்கே
''தலையலால் கைம்மா றில்லை''
என்பரே தமிழ்ச் சான்றோர்!




30 பற்பல பரிசு பெற்றார்;
பல்கலைக் கழகத் தார்கள்
விற்பன ரிவருக் கீந்த
மேன்மைகள் எண்ணி லாத!
சொற்றிறம் வல்ல சுப்பு
ரெட்டியா ரென்னும் தோன்றல்
நற்றமிழ் நன்னூ லின்னும்
ஆயிரம் நல்கி வாழ்க!

31. மூச்செலாம் தமிழ்தான் இந்த
மூதறி வாளர்க் கென்பேன்;
பேச்செலாம் இலக்கி யந்தான்!
பிறழ்ந்தொரு நாளும் ஐயர்
''ஆச்செலாம்'' எனஓய்ந் தாரில்!
தமிழ்ப்பயிர்க் கருளும் கங்கைப்
பாய்ச்சலாம் இவரின் தொண்டு!
வாழிய இவர்பல் லாண்டே!

* * *









*விட்டு சித்தன் விரித்த தமிழ்*

**Vittu Chitthan Viritha Thamizh**

*புலவர்* **இரா. திருமுருகன், க.மு., கல்.மு.,**
*புதுச்சேரி - 605 001*

***அவர்கள் அன்புடன் உவந்தளித்த***

# சிறப்புப் பாயிர மாலை

*1. செந்தமிழ்த் தென்புதுவை என்று*
*திகழ்புதுச் சேரி தன்னைப்*
*பைந்தமிழ்த் தேர்ப்பாகன் பாரதி*
*பாங்குடன் பாடி னாலும்*
*நந்தமிழ் ஆழ்வார் இருவர்*
*பிறந்ததும் நாட்டின் தெற்கில்*
*முந்தி இருந்தது வில்லிபுத்*
*தூர்ப்புதுவை மூதூர் அன்றே?*




*2. அந்தப் புதுவை அருமைதனை*
*இவ்வுலகம் அறியும் வண்ணம்*
*முந்து புகழ்சான்ற வேயர்*
*குடித்தோன்றல் முகுந்த பட்டர்*
*அந்தம் மிகுபண்பின் அம்மை*
*பதுமவல்லி ஆகி யோர்க்கு*
*வந்து மகனாக விட்டுசித்*
*தர்பிறந்த வளர்ந்து வந்தார்.*

*3. மந்தாரை மாதவி மல்லிகை*
*முல்லை மணத்தை நெஞ்சில்*
*சிந்தும் திருத்துழாய் தாமரை*
*யாதி செழும லர்சேர்*
*நந்த வனங்கள் வளர்த்துமலர்த்*
*தொண்டு நடத்தி என்றும்*
*சிந்தை முழுதும் திருமால்*
*நிறைவிட்டு சித்தர் வாழ்ந்தார்.*

*4. துளவ நிழலிற் கிடந்த*
*மகவுதனைத் தூக்கி வந்தே*
*அளவில் உவகையொடும் கோதையெனும்*
*பேர்வைத் தழைது நாளும்*
*உளமார் இறையுணர்வும் ஒண்டமிழும்*
*ஊட்டி உயர்ந்த வண்ணம்*
*வளமுடன் பட்டரும் தேவி*
*விரசையும் வளர்த்து வந்தார்.*

*5. பாண்டியன் கொண்டாடப் பட்டர்*
*பெருமாள் பரத்து வத்தை*
*வேண்டும் வகையில் விரித்துக்*
*கிழியை விரைந்த றுத்தார்*
*ஈண்டிய சங்கம் இயம்பிட*
*யானை இவர்ந்த போதில்*
*ஆண்டுபல் லாண்டென்றே ஆண்டவன்*
*காட்சி யதில்தி ளைத்தார்.*




*6. வண்ணமா டங்களே சூழ்திருக்*
*கோட்டியூர் வந்த ணைந்து*
*கண்ணனைப் பிள்ளைப் பருவத்துத்*
*தெய்வமாய்க் கண்டு கொண்டார்*
*எண்ணத்தில் தம்மை எழிலார்*
*யசோதையாய் ஏன்று கொண்டு*
*வண்ணங்கள் கொஞ்சிடும் பிள்ளைத்*
*தமிழ்ப்பாடல் மகிழ்ந்தி சைத்தார்.*

*7. ‘‘பேதைக் குழவி பிடித்துச்*
*சுவைத்துண்ணும் பெற்றி மைசால்*
*பாதக் கமலங்கள் வந்திங்குக்*
*காணீரோ பவள வாயீர்!*
*காதினிற் குண்டலம் காணீரோ*
*பூந்தளிர்க் கைகள் என்னும்*
*போதினைக் கண்டு புரிவளை*
*யீர்! வந்து போற்றி டீரோ?*

*8. தாழியில் வெண்ணெய் தடங்கையால்*
*தொட்டளைந்து தான்வி ழுங்கும்*
*பேழை வயிற்றெம் பிரான்கண்டாய்*
*உன்னுடனே பெட்புக் கொண்டான்*
*ஆழிகொண் டுன்னை எறிவான்*
*வராவிட்டால் ஐயம் இல்லை*
*வாழ உறுதியேல் மாமதியே*
*தாமதியேல் மகிழ்ந்து வாராய்!*

*9. எண்ணெய் கவிழ்த்தும் இளைஞர்களைக்*
*கிள்ளி எழுப்பி விட்டும்*
*கண்ணில் மணல்கொண்டு தூவியும்*
*காணாமல் காலிற் பாய்ந்தும்*
*பண்ணும் குறும்பு பொறாமே*
*முறையிடுவான் பலரும் வந்தார்*
*கண்ணின் இனிய பெருமானே*
*நீராடக் கடிது வாராய்!*




10. கஞ்சன் கறுக்கொண்டு நின்றன்மேல்
ஏவியதோர் கரிய பேயை
அஞ்சி அலற அழித்தொழித்தாய்
அஃதொன்றோ? ஆவி போக்கும்
நஞ்சுமிழும் நாகம் கிடந்தநற்
பொய்கைதனில் நடுங்கப் பாய்ந்து
அஞ்சப் பணத்தின்மேல் அஞ்சனத்தின்
வண்ணா! நீ ஆடி நின்றாய்.''

11. என்றெல்லாம் பட்டர்பிரான் இன்பம்
தருந்தமிழில் இசைத்த பாடல்
துன்றும் பொருள், சொல், தொடைந யங்கள்
காட்டிச் சுவைகள் எல்லாம்
நன்று விளக்கி நமக்கின்
றொருநூல் நயந்த ளித்தார்
என்றும் இளையர் எழில்சுப்பு
ரெட்டியார் என்னும் ஏந்தல்.

12. சிறுவிரல்கள் மெல்லத் தடவிப்
பரிமாறச் செங்கண் கோடக்
குறுவெயர் விற்புருவம் கூடலிப்பக்
கோவிந்தன் குழலூ துங்கால்
கறவையின் கூட்டங்கள் கால்பரப்பிக்
கேட்டதுவும் கண்ணன் தோற்றம்
சிறுகாலை வண்டுதொழும் தெய்வப்
பதியெங்கும் திகழு மாறும்,

13. வெள்ளத்தின் மேலே விரிந்திருக்கும்
பாம்பணையில் விளங்கு மாப்போல்
உள்ளத்தின் உள்ளும் உவந்தினிது
செங்கண்மால் உறையு மாறும்,
கள்ளத்தில் கண்ணனுக்கே காதலியாய்த்
தன்னைத்தான் காட்டு மாறும்,
பள்ளத்தில் வீழ்ந்தோர் பதவிபெறப்
பத்திநெறி படைத்த வாறும்,




*14. இருப்பூர்தி, பேருந்து போன்ற*
*தனித்தமிழ் இனிய சொற்கட்(கு)*
*இருப்பாய் விளங்கும் இனியவிந்*
*நூலினிலே எடுத்துக் காட்டி,*
*விருப்புற்றார் யாரும் விளங்கி*
*மகிழ்வகையில் விரித்த தன்மை*
*திருப்பதிப் பல்கலைக்கே செந்தமிழைத்*
*தந்தவரின் சிறப்பே அன்றோ?*

*15. பாடிப் பரவுதற்கே பட்டர்பிரான்*
*வாய்மலர்ந்த பாட்டென் றெண்ணும்*
*வாடிக்கை அன்பர்கள் நெஞ்சில்*
*தமிழ்ச்சொல் வளங்கள் எல்லாம்*
*ஓடிப் பெருகும் வகையில்*
*படிமவகை உத்தி தன்னைத்*
*தேடி விளக்குதலும் சுப்புரெட்டி*
*யார்க்குரிய சிறப்பே அன்றோ?*

**வேறு**

*16. ஆய்ப்பாடிக் கண்ணனையே தெய்வ மாக*
*ஆழ்வார்கள் பற்பலரும் சுவைத்தார்; பெற்ற*
*சேயாகப் பெரியாழ்வார் சுவைத்தார்; நாளும்*
*செய்யதமிழ் மாலைகளே செய்து சூடி*
*நாயகனாய் ஆண்டாளும் சுவைத்தார்; அந்த*
*நற்றமிழைச் சுப்புரெட்டி யார்சு வைத்துத்*
*தோய்வுற்றார்; அதனாலே நாம்சு வைக்கச்*
*சுவை ததும்பும் இந்நூலை யாத்துத் தந்தார்.*

*17. முப்போதும் திருநீறு தாங்கும் நெற்றி;*
*மூழ்கிமிக வைணவத்தில் திளைக்கும் நெஞ்சம்;*
*தப்பேதும் அறியாத செம்மல் வாழ்க்கை;*
*சலியாத தமிழ்ப் பேச்சு; பயணம் செய்யும்*
*அப்போதும் விடுதிகளில் தங்கும் போதும்*
*அணுவளவும் நேரத்தை வீணாக் காமல்*
*எப்போதும் எழுதிக்கொண் டிருக்கும் கைகள்;*
*இவற்றின் பேர் சுப்புரெட்டி யார்என் பார்கள்.*



18. பண்பாட்டிற் கொருவடிவம்; எளிய தோற்றம்
பழகுவதற் கினியமுகம்; பழகி விட்ட
நண்பர்களின் நலன்களையே கருது கின்ற
நல்லமனம்; ஆராய்ச்சி போற்றும் உள்ளம்
பண்பாடு, வள்ளுவனார், இராம லிங்கர்,
பகர் மு.வ. இவர்பற்றி ஆராய் கின்ற
வண்புலவர் பரிசுபெற வைப்பு வைத்த
வள்ளலுளம் இவைசுப்பு ரெட்டி யாராம்.

19. எத்தனைதான் புகழ்தன்னை எய்தி னாலும்
எழுபதுக்கு முன்னாலே எழுபத் தெட்டு
சத்தான நூல் எழுதி வெளியிட் டாலும்
சலியாமல் கலைக்கழகம் பலவும் சென்று
முத்தான விரிவுரைகள் ஆற்றி னாலும்
முயன்றுகலைக் களஞ்சியத்தைச் சமைத்திட் டாலும்
எத்துணையும் செருக்கடையா எளிய உள்ளம்
இதன்பெயர் தான் சுப்புரெட்டி யார்என் பார்கள்.

20. தாய்தன்னைக் குடல்விளக்கம் செய்த அந்தத்
தாமோத ரன்போலக் கோட்டத் தூரைச்
சேயாக அவ்வூரில் பிறந்த தாலே
சேயோரும் அறிந்திடவே செய்து விட்டார்
தூயபெரும் தொண்டுகளால் துறையூர் இன்று
சுடர்காரைக் குடிவேங்க டம்சீர்ச் சென்னை
ஆயபல ஊர்களையும் சிறக்கச் செய்தார்
அங்கெல்லாம் என்றுமிவர் புகழ்ம ணக்கும்.

21. அறிவியலில் தேர்ந்திருப்பார் சிலபேர்; என்றும்
ஆழ்ந்திருப்பார் இலக்கியத்தில் சிலபேர்; ஆனால்
அறிவியலும் இலக்கியமும் ஒருங்கே வல்லார்
அருமையிலும் அருமை; இவர் அதற்கோர் சான்று!
அறிவியலில் பதினான்கு புதுநூல் செய்தார்;
அவ்வளவில் இலக்கியங்கள் படைத்த ளித்தார்;
அறிவியலின் பார்வையினால் ஆக்கித் தந்த
ஆராய்ச்சி நூல்களும்அவ் வளவி ருக்கும்.




*22. மாசில்லாச் சமயநிலை விளக்கும் நூல்கள்*
*வரிசையிலோர் பதினேழு படைத்த ளித்தார்;*
*தேசுடைய சான்றோர்தம் வாழ்க்கை தன்னைத்*
*தெரிக்கின்ற பனுவல்களோ முந்நான் காகும்;*
*ஆசிரியப் பணியாற்றி அறிந்த வெல்லாம்*
*ஐந்தரிய நூலாகத் தந்தார் மண்மேல்;*
*ஆசிரியப் பணியிருக்கும் வரையி ருக்கும்*
*அவர் படைத்த 'தமிழ்பயிற்று முறை'யின் சீர்த்தி!*

*23. கடலனைய பெருவாழ்வின் பரப்பை எல்லாம்*
*கடந்துவந்த பட்டறிவு; சொல்லச் சொன்னால்*
*மடைதிறந்த வெள்ளம்போல் பெருக்கெ டுக்கும்;*
*மாணிக்கம் வைரமெலாம் வந்து வீழும்!*
*கெடலரிய தம்வாழ்வில் நிகழ்ந்த எல்லாம்*
*கிளர்ச்சிதரும் பலநினைவுக் குமிழி யாக*
*விடலரிய விருப்பினொடு சுவைப்ப தற்கு*
*விரிவாக எழுதியுள்ளார் வெளியி டற்கே.*

*24. முனைவர்கள் பலபேரைப் படைத்த தாலே*
*முதுமுனைவர் என்றிவரைச் சொல்ல வேண்டும்;*
*அனைவருமே ஒருமனமாய் அளித்து வாழ்த்தும்*
*'அருங்கலைக் கோன்' பட்டத்தை அடைந்த சான்றோர்;*
*கனவுழைப்பால், தமிழரசால், தமிழ்வ ளர்ச்சிக்*
*கழகத்தால் சென்னைப்பல் கலையால் எட்டு*
*நினைவரிய பரிசுகளைப் பெற்ற மேலோர்;*
*நிகரற்ற இவர்பெருமை நிகழ்த்தப் போமோ?*

*25. இத்தகைய பேரறிஞர் எழுதி யுள்ள*
*எளியநடை இனிய தமிழ்க் கிருப்பே யான*
*வித்தகராம் விட்டுசித்தர் விரித்துச் சொன்ன*
*வீறுதமிழ்ப் பெருமைதனை விளக்கும் இந்நூல்*
*இத்தரையில் தமிழ்வாழும் வரையில் வாழும்!*
*இருந்தமிழில் இதுபோலத் தமிழர்க் கெல்லாம்*
*சொத்தான பலநூல்கள் இயற்றி எங்கள்*
*சுப்புரெட்டி யார்உலகில் நீடு வாழி!*

* * *





மாணிக்கவாசகர்

பாரி நிலையம்

*மாணிக்கவாசகர்*

**Maanickavasakar**


*புலவர்* ***த. பெரியாண்டவன்,*** *எம்.ஏ.,*

*உதவி இயக்குநர்,*

*தமிழ்வளர்ச்சித்துறை, சென்னை - 108*


***அவர்கள் அன்புடன் உவந்தளித்த***

## சிறப்புப் பாயிர மாலை

*திருநீறு ஒளிரும் நெற்றி*
*தீந்தமிழ் மணக்கும் செவ்வாய்*
*திருமால்சீர் பரவும் நெஞ்சம்*
*சேர்ந்தாரைத் தாங்கும் அன்பு*
*உருவாகத் தோன்றும் செம்மல்*
*உயர்சுப்பு ரெட்டி யாராம்*
*பெருமகன் சீர்மை முற்றும்*
*பேசுதல் யாரா லாகும்?*

*சொல்லிலே இனிமை; தூய*
*நெஞ்சிலே தமிழு ணர்ச்சி;*
*அல்லுநன் பகலு மெல்லாம்*
*ஆய்வுகள் செய்தல் மற்றும்*
*பல்துறை வாயி லாகப்*
*பைந்தமிழ்த் தொண்டு செய்தல்*
*வல்லநல் லறிஞர் சால்பு*
*வையகம் அறிந்த தன்றோ!*

*ஆங்கில மொழிவ ளப்பம்*
*அருந்தமிழ் பெறுதல் வேண்டும்*
*தூங்காமல் அறிஞ ரெல்லாம்*
*தொண்டுகள் செய்ய வேண்டும்*
*ஏங்கிடும் தமிழ்த்தாய் ஏக்கம்*
*ஏகிட வேண்டும் என்னும்*
*பாங்குளம் வேண்டு மென்பார்*
*பலசெய்தி சுவையாய்ச் சொல்வார்!*

*பழங்கதை சொல்லிச் சொல்லிப்*
*பண்டைநற் பெருமை பேசிப்*
*பொழுதினை வீணே போக்கும்*
*புல்லர்போ லிருந்தி டாமல்*
*அழகுடைத் தமிழ்க்கன் னிக்கு*
*அணிகல னாகும் நூல்கள்*
*இழைத்திழைத் திட்டுப் பார்த்து*
*இன்புறும் மனத்த ராவார்!*

*கன்னலின் இனிமை தோற்கக்*
*கற்கண்டுத் தமிழு ரைப்பார்!*
*முன்னிய ஆழ்வார் பாட்டில்*
*மூழ்கியே இன்பம் காண்பார்!*
*தன்னிகர் இல்லா வண்ணம்*
*தமிழ்ப்பணி நாளும் செய்வார்*
*மன்னவர் இவர்ப டைத்த*
*மாநூல்கள் கொஞ்ச மாமோ?*




அறிவியல் நூல்கள் தந்தார்
ஆய்வுநூல் பலவும் தந்தார்
நெறியிலக் கியங்கள் தந்தார்
நேர்சமய நூல்கள் தந்தார்
வரலாற்று நூல்கள் தந்தார்
வனப்பாசி ரியநூல் தந்தார்.
உரனேற்று மிவர்நூல் மொத்தம்
ஒரெண்பத் தேழு ஆகும்!

காவியச் சுவையில் தோய்ந்துக்
கலைபல ஆய்ந்தும் கற்றும்
பாவியல் திறங்கள் தேர்ந்தும்
பலநூல்கள் கொடுத்த தாலே
வாவியில் கதிரோன் தன்னை
வரக்கண்ட தாம ரைபோல்
மேவிய தமிழாம் கன்னி
மேனிபூ ரித்தாள் ஆமாம்!

அந்தநூல் வரிசை தன்னை
அடுத்ததாய்ப் புகழ்வி ளங்க
வந்தநூல் தான்மா ணிக்க
வாசகர் என்னு மிந்நூல்
இந்தநூல் தன்னை யானும்
எழுத்தெண்ணிச் சுவைத்து வேறு
எந்தநூல் இதற்கீ டென்றே
இன்பத்தில் திளைத்துப் போனேன்!

வேணியங் கொன்றைத் தாரான்
விரும்பும்நல் லடியா ரான
மாணிக்க வாச கன்சீர்
மன்பதைக் குரைக்கு மிந்நூல்
ஆணிப்பொன் னொத்த தாக
அமைந்துள திறங்கள் சொல்ல
வாணிக்கும் கூட யிங்கே
வார்த்தைகள் போதா தம்மா!




*பெருமான்மணி வாச கர்தாம்*
*பிறந்தநற் பேறு பெற்ற*
*திருவாத வூரைப் பற்றித்*
*தெரியாதார் வருந்த வேண்டாம்*
*ஒருமுறை இந்த நூலை*
*ஓதுவா ராகில் அன்னார்*
*திருவாத வூர்க்கே சென்று*
*திரும்பிய உணர்வு கொள்வார்!*

*எத்துணை வருண னைகள்*
*எழில்மிகு உவமைத் தேன்கள்*
*முத்தெனும் விளக்கப் பூக்கள்*
*முழுமைசேர் ஒப்பு மைகள்*
*அத்தனை நயமும் சேர்ந்து*
*அமிழ்தமாய் இனிக்கும் நூலை*
*வித்தகன் சுப்பு வன்றி*
*வேறெவர் படைக்கக் கூடும்?*

*திருவாச கத்தை மற்றும்*
*செய்வித்த பெரியோன் தன்னை*
*ஒருவாச கத்தில் முற்றும்*
*உணருதல் வேண்டு மென்னில்*
*கருவினில் திருப டைத்த*
*கலைவலோன் சுப்பு சொன்ன*
*பெருமைநூல் இஃதே போதும்*
*பெரும்பயன் மலைபோல் சேரும்!*

*வான்புகழ்த் தொண்டு செய்து*
*வண்டமிழ் வளர்த்த தாலே*
*தேன்தமிழ்க் கலைஞர் கையால்*
*திரு.வி.க. விருது பெற்ற*
*கோன்சுப்பு ரெட்டி யாரைக்*
*கும்பிட்டு வணங்கு கின்றேன்*
*நீணில மீதில் அன்னார்*
*நீடுழி வாழ்க வென்றே!*

* * *







*பரகாலன் பைந்தமிழ்*

**Parakaalan Paithamizh**

*டாக்டர் பு.மு. சாந்தமூர்த்தி,* எம்.ஏ., பிஎச்.டி.,
*தமிழ்ப் பேராசிரியர் - துறைத் தலைவர்*
*சௌராஷ்டிர கல்லூரி, மதுரை - 625 006*

*அவர்கள் அன்புடன் உவந்தளித்த*

# சிறப்பு பாயிர மாலை

*வேங்கடவன் மலர்த்தாளில் நெஞ்சம் வைத்து*
*வினையகற்றும் பிரபந்த விளக்கை ஏந்தி*
*ஓங்குபுகழ்த் தமிழ்ச்சுடரின் பாதை கண்ட*
*உயர்வானப் பரப்பாக அறிவைத் தேக்கிப்*
*பாங்குடனே தொண்டாற்றும் என்றன் ஆசான்*
*பண்பட்ட தமிழ்ச்சுப்பு ரெட்டி யார்தம்*
*தேங்கமமும் நூலுக்குள் திளைத்து நின்றேன்*
*தேவநலத் தொடர்களிலே திருவைக் கண்டேன்.* 1




*செந்தமிழில் தோய்ந்தவுளம் என்ப தாலே*
*செம்மாந்த பாரதியை உணர்ந்த தாலே*
*சிந்தையிலே பல்லாற்றல் வளரக் கண்டார்*
*செழுந்தமிழின் நூற்பரப்பில் சிறப்புத் தந்தார்;*
*இந்தவளம் வாய்த்திட்ட இசைமை யாலே*
*இவர்பெற்ற* **அருங்கலைக்கோன்** *என்னும் பட்டம்*
*சந்ததமும் இவர் திறமை சாற்று மன்றோ?*
*சங்கத்துத் தமிழ்வளரும் சான்று மன்றோ?* 2

*விண்ணளவு விரிந்திலங்கும் அறிவின் ஈட்டம்*
*விரும்பித்தாம் கொண்டதனால் தமிழ் வீட்டில்*
*எண்ணரிய துறைகளிலே இதயம் தந்தார்*
*இலங்குதுறை பலவற்றின் நூல்கள் தந்தார்;*
*கண்ணுக்குள் கனிவுகளைத் தேக்கிக் கொண்டு*
*கல்விதரும்* **தமிழ்ச்செம்மல்** *ஆன ஆசான்*
*பண்பட்ட நெஞ்சாழம் பார்க்க வேண்டின்*
*பரகாலன் பாட்டாய்வே போது மென்பேன்!* 3

**சடகோபன் பொன்னடி** *என் றான ஆசான்*
*சாற்றுதமிழ்ச் சுப்புரெட்டி யார்தாம் கண்ணில்*
*நடமாடும் களஞ்சியமாய்த் தோற்றம் தந்தார்*
*நம்மாழ்வார் பாசுரத்தின் நயத்தைப் போல;*
*வடநாடும் தென்னாடும் கண்ட மாலின்*
*வளமான தலமெல்லாம் படைத்த தாலே*
*படமாடும் பாம்பணையில் பள்ளி கொண்ட*
*பரமனவன் திருவருளே வாழ்க்கை என்பார்!* 4

*நெற்றியிலே இறைச்சின்னம் நெஞ்சம் காட்டும்*
*நிமிர்ந்தநடைப் பெருமிமோ நினைப்பைக் காட்டும்;*
*கற்றதுறை அறிவெல்லாம் ஆற்றல் காட்டும்*
*களங்கமிலாக் குழந்தைமனம் இதயம் காட்டும்;*
*பொற்புடைய பணியென்றும் பொலிவைக் காட்டும்*
*புகழ்படைத்த படைப்புகளோ திறனைக் காட்டும்*
*நற்புலமை பேராண்மை தமிழே காட்டும்*
*நல்லிதயப் பண்பாட்டை வாழ்க்கை காட்டும்!* 5



*கண்டிருக்கும் வழிகாட்டி ஆசான் நெஞ்சக்*
*கனிவுகளை இவர்போலக் கொண்டா ரில்லை;*
*பண்டிருக்கும் நூல்களையும் ஆய்வு செய்வார்*
*பயன்கூட்டும் அறிவியலும் தேர்ந்து சொல்வார்!*
*மண்டிருக்கும் கலைச்செல்வம் யாவும் இந்த*
*மாநிலத்தின் பயனுக்கே என்ப தாலே*
*கொண்டிருக்கும் அருங்கலைக்கோன் பட்டம் உண்மை*
*கூறுகின்ற கல்வெட்டாய் என்றும் வாழும்!* 6

*திருநீற்றை அணிந்தபோதும் நெஞ்சிற்குள்ளே*
*திருமாலின் அருளிச்செயல் பாட்டே கேட்கும்*
*ஒருமனத்தில் இருகாட்சி படைத்துக் கொண்ட*
*ஒருமை நலப் பொதுமையதன் உணர்வு கொண்டார்;*
*பெருந்தன்மை இவர்கொண்ட வாழ்க்கை என்றால்*
*பேரன்பே இவர் காட்டும் பாச மாகும்;*
*வருநாளின் வரலாற்றில் வாழும் நெஞ்சாய்*
*வாழ்கின்றார் சுப்புரெட்டி யார் என் பேனே!* 7

*பரமனருட் சுடர்பாடிக் கலியன் தந்த*
*பாசுரத்தில் திளைத்திட்ட என்றன் ஆசான்*
*வரலாற்றின் வழிநின்று வகுத்துத் தந்த*
*வளமான பயணங்கள் எல்லாம் நெஞ்சில்*
*சுரக்கின்ற அருளாகிப் பாய்வ தாலே*
*சொற்றமிழின் இறைக்காட்சி உளத்தில் தோன்றும்!*
*வரமாக இந்நூலை ஏற்றுக் கொண்டால்*
*வருநாளின் பயணத்தில் இறைமை வாழ்த்தும்!* 8

*வளர்கின்ற ஆண்டுகளை வெல்லும் ஆர்வம்*
*வளமைசேர் தமிழுக்குள் வாழும் உள்ளம்*
*தளராத தமிழ்ப்பணியில் பொன்னி வெள்ளம்*
*தாமறிந்த கலைபிறர்க்குக் கூறும் வேட்கை*
*அளப்பரிய கருத்துகளை எண்ணும் நெஞ்சம்*
*அன்றாடம் இறைநெறியில் வழுவாச் செம்மை*
*உளமறிந்த ஆய்வுகளில் திளைக்கும் சீர்மை*
*உள்ளபடி ஐயாவை இவையே காட்டும்!* 9




பேச்சினிலே சிரிப் பிருக்கும் சிரிப்பிற் குள்ளே
பெருமைதரும் கருத்திருக்கும் கனிவி ருக்கும்
மூச்சினிலே வேங்கடவன் மணமே வீசும்
முப்போதும் இறைமறவா முழுமை தோன்றும்;
பாச்சுவையில் திளைக்கின்ற போதில் நம்மைப்
பரவசத்தில் ஆழ்த்துகின்ற பண்பே தோன்றும்
நாச்சுவையில் நல்லவளம் கொண்ட ஆசான்
நான்பெற்ற வழிகாட்டி; என்றன் பேறே! 10

எல்லார்க்கும் வாய்க்காத இளமை நெஞ்சம்
இளநெஞ்சில் தமிழ்ப்பண்பே என்றும் தஞ்சம்
நல்லார்வம் வளர்ப்பதிலே சீர்மை கொள்ளும்
நாளெல்லாம் எழுதுவதில் உள்ளம் துள்ளும்;
சொல்லாண்மைப் பிரபந்தப் பாடற் காட்சி
சுவை நூல்கள் முன்கூறும் புலமைச் சாட்சி;
வல்லமைகள் எல்லார்க்கும் வாய்ப்ப தில்லை
வளர்துறையின் திறமைக்கும் இவர்போ லில்லை! 11

கலியனாரின் புகழ்காட்டும் நூலைப் போலக்
கனிதமிழில் பிற ஆழ்வார் வாழ்வைக் கூறும்
பொலிவுள்ள பலநூல்கள் தமிழுக் கீந்து
பொன்னாழிக் கையானின் புகழைப் பாடி
வலிமைகளை நாளெல்லாம் வளர்க்க வேண்டும்
வாழ்க்கைநலப் பாதையிலே இருகை நீட்டி
மெலிந்தமனம் வீறுகொளும் வண்ணம் ஐயா
மேன்மேலும் இறைநூல்கள் படைத்தல் வேண்டும்! 12

இனிக்கின்ற சொல்லாலே இறையைப் பாடி
இதயத்தை நெகிழவைக்கும் ஆழ்வார் பாட்டின்
தனிச்சுவையை "வியாக்கியான" உரையில் கண்டோம்
தமிழறிந்தார் நெஞ்சாரக் சுவைக்கும் வண்ணம்
கனிதமிழில் அவ்வுரைக்கும் விளக்கம் தந்தால்
காண்பதுவும் சுவைப்பதுவும் இறைமை ஒன்றே!
இனியதமிழ் உணர்வுடனே கேட்டுக் கொண்டேன்
எளியவனின் வேட்கையினைத் தீர்க்க என்றே! 13



என்றுமுள தென்தமிழை இயம்பிக் கம்பர்
எழுதிவைத்த இராமகாதைச் சுவையைப் போல
குன்றாத காதலுடன் கோதை சொன்ன
கொண்டாட்டத் திருப்பாவைப் பண்ணைப் போல
நன்றறிந்த ஆழ்வார்கள் நாளும் நாளும்
நவின்றிட்ட பிரபந்தப் பாடல் போல
என்றென்றும் ஐயாஉம் இளமை நெஞ்சால்
எமைவளர்க்கும் தமிழ்தருக என்றே கேட்பேன்! 14

தன்னை நன்றாய்த் தமிழ்செய்யு மாறு தேவன்
தந்ததமிழ் கொண்டதகை சான்ற ஐயா,
மன்னுமாரு தமிழ்ச்செம்மல் என்றே ஆனீர்
மாண்புடைய அருங்கலைக்கோன் என்றும் ஆனீர்;
தன்னின்பப் பெருக்காலே தமிழும் நாளும்
சடகோபன் பொன்னடி என் றிசைத்து வாழ்த்தக்
குன்றெனவே உயர்கின்றீர் வணங்கு கின்றேன்
கூறுதமிழ்ப் பாசுரம் போல் வணங்குகின்றேன்! 15

கலியனார் இறைவாழ்வின் காட்சி கூறும்
கனிவான செய்திகளோ செவிசேர் இன்பம்
மலிந்திருக்கும் அகச்சான்றின் நிறைவைக் காட்டி
மணித்தமிழில் வடித்திருக்கும் வாழ்க்கைக் காட்சி
சலிப்பின்றி நமையழைத்துச் செல்லும் பாதை
சார்ந்திருக்கும் வைணவத்தின் செழுமைப் பாதை!
பொலிந்திருக்கும் கட்டுரைக்குள் பாடற் சான்று
பொன்னான ஆழ்வாரின் வாழ்வைக் காட்டும்! 16

வடநாட்டுத் திருத்தலங்கள் வழங்கும் தேவ
வளக்காட்சி ஒருமைக்குச் சான்று கூறும்;
திடங்கொண்ட மூவேந்தர் பார்வை கொண்ட
திருநாட்டின் பயணங்கள் அருளைக் கூறும்
மடைவெள்ளப் பெருக்காகக் கலியன் பாடல்
மாநிலத்தின் தலமெல்லாம் இருகை நீட்டி
நடைபோட்டுத் தந்திருக்கும் பயணக் காட்சி
நாளெல்லாம் மணிவண்ணன் நலனே கூறும்! 17



அகப்பொருளில் இறையன்பைக் காணும் பாங்கோ
ஆழ்வாரின் நெஞ்சளித்த பரிசி லாகும்;
தகவுடையார் சொல்விளக்கம், பரிசின் சீர்மைத்
தகுதிகாண விதந்தோதித் தரத்தைக் காட்டும்;
'மிகநல்ல மிகநல்ல' என்னும் வண்ணம்
மேலான தத்துவத்தின் விளக்கம் யாவும்
அகத்தினிலே திருவருளின் பதிவைக் காணும்;
அப்பதிவில் நிலைப்பதெலாம் இறைமை ஒன்றே! 18

முறையான மனக்காதல் முகிழ்த்து விட்டால்
முத்தமிழில் மாலவனைப் பணிந்து விட்டால்
நிறைவான பேரின்பம் நெஞ்சில் தோன்றும்
நினைவிற்குள் மணிவண்ணன் நேசம் தோன்றும்;
இறையின்ப அநுபவத்தைத் தந்த சொல்லில்
இனியவனைத் துய்த்தமனப் பற்றைக் கண்டேன்;
மறையாளன் திருவருளின் அநுப வத்தில்
மனம்தோய்ந்த என்னாசான் நெஞ்சம் கண்டேன்! 19

ஊர்விளக்கம் உற்றபல தலவி ளக்கம்
உயர்ந்தோங்கும் திருக்கோவில் விளக்கம் சீர்த்த
பேர்விளக்கம் பெருமைதரும் பாவி ளக்கம்
பேராளன் அருள்விளக்கம் செயல்வி ளக்கம்
சீர்விளக்கம் கலியனாரின் மனவி ளக்கம்
செந்தமிழின் சுவைஊட்டும் சொல்வி ளக்கம்
யார் தருவார் இவர்போல நூலுக் குள்ளே?
எமையாளும் பரமனவன் விளக்கம் கண்டேன்! 20

வண்டடைந்த 'மதுவிரதப்' பெயரைக் கூறும்
வனப்பிற்குள் மனம்பதிந்தால் பொலிவு தோன்றும்;
கொண்டிருக்கும் ஞானத்தில் தான்தன் பேச்சு
கூடிவரும் பிரேமத்தில் தான்பெண் பேச்சு
கண்டிருக்கும் சுவைகூறும் எழுத்திற் குள்ளே
கண்பதிந்தால் காண்பதெலாம் மாலின் காட்சி!
பண்கலந்த பாசுரத்தில் தோய்ந்த ஐயா
பார்த்தபடி படித்திட்டால் பரமன் காட்சி! 21

*பெற்றவளின் உளமாகிப் பெருமை பேசிப்*
*பேணுகின்ற அகக்காதல் பேச்சி னாலே*
*பற்றுகின்ற தாய்ப்பாசுர விளக்க மெல்லாம்*
*பக்குவத்தை வெளிப்படுத்தும் ஆன்மக் காட்சி!*
*உற்றதுணை என்றுணர்ந்தே ஆன்ம வேள்வி*
*உருவாக்கும் தோழிப்பா சுரங்கள் எல்லாம்*
*நற்பயனைக் காண்பதற்கு வழிகள் காட்டும்*
*நம்மவரின் விளக்கங்கள் நயத்தைக் கூட்டும்!* 22

*உள்ளத்தில் உருக்கங்கள் வந்த வண்ணம்*
*உயிர்ப்பிற்குள் இறைவேட்கை வளர்த்த வண்ணம்*
*பள்ளமடை வெள்ளமெனப் பாய்ந்த வண்ணம்*
*பாடுகின்ற மகள்பாசுரப் பாடல் யாவும்*
*அள்ளுசுவை விளக்கத்தால் பொலிவைக் கூட்ட*
*அமைந்திருக்கும் கருத்தோட்டம் நெஞ்சிற் குள்ளே*
*தெள்ளூற்ற தமிழமுத இனிமை சேர்க்கும்*
*திருமாலின் அகவிளக்கம் அருளைச் சேர்க்கும்!* 23

*வழிபாட்டின் வழியில்தான் அருளைக் காணும்*
*வகைகூறும் தத்துவத்தில் பாவைக் காட்சி;*
*மொழிகின்ற அவதாரம், தத்து வத்தின்*
*முழுமைக்குள் அடங்குவதும் விளக்கக் காட்சி;*
*விழிகளிலே நீர்மல்க உருகும் நெஞ்ச*
*விருப்பிற்குள் தத்துவமே விளைச்ச லாகும்;*
*மொழிப்பண்கள் தத்துவமாய் விளங்கும் சீர்மை*
*மொழிகின்ற சொல்லெல்லாம் உயிரின் காப்பே!* 24

*ஆழ்வாரின் பாடற்குள் ஆழங் காண*
*ஐயாவின் இறைநெஞ்சம் கொண்ட ஆர்வம்*
*ஆழ்ந்தமனப் பக்குவத்தின் வலிமை யாகும்*
*அமைந்துள்ள கட்டுரைகள் வளமை கூட்டும்;*
*சூழ்ந்திருக்கும் தலமெல்லாம் சுற்றிப் பார்த்துச்*
*சுடராழித் திருவாளன் பண்மைக் கூறி*
*வாழ்வியலைத் தந்திருக்கும் கலியன் பாடல்*
*வரலாற்றின் தலப்பயணம் அருளைச் சேர்க்கும்!* 25



*சொல்வரிசை சீர்வரிசை என்றே கண்டு*
*சுவையான விளக்கங்கள் கூறும் பாங்கும்*
*நல்விளக்கம் தரும்போதில் குறிப்பும் தந்து*
*நயவுரைகள் சேர்க்கின்ற நலத்தின் பாங்கும்*
*வல்லமையை முன்னிறுத்தும் திறமை என்பேன்*
*வளர்கின்ற நூலெங்கும் அந்தப் பாங்கே*
*நல்லியல்பாய் அமைவதுவும் சுவையைக் கூட்டும்*
*நற்பாடல் பெறும்விளக்கம் நம்மை வாழ்த்தும்!* 26

*தொடக்கமுதல் இறுதிவரை தொடரும் பக்கம்*
*தொடர்ந்துவரும் கலியனாரின் உள்ளம் காட்ட*
*அடக்கமுடன் வரும்விளக்க உரைகள் எல்லாம்*
*ஐயாவின் நெஞ்சார்ந்த புலமை காட்ட*
*நடக்கின்ற இவ்விரண்டும் ஒன்றாய்ச் சேர்ந்து*
*நல்லிறைவன் திருவருளின் நெருக்கம் காட்ட*
*வடநாடும் தென்னாடும் ஒன்றாய்ச் சேர*
*வடித்ததமிழ்க் கலியனார்போல் நூலும் வாழ்க!* 27

*தந்திருக்கும் இந்நூலின் உள்ளே உள்ளம்*
*தந்தவர்க்குத் திருமாலின் அருளே வாய்க்கும்;*
*சிந்தையிலே வைணவத்தின் செழுமை தேக்கிச்*
*சிறப்போர்க்கு மணிவண்ணன் மணமே வாய்க்கும்;*
*முந்தைமர பறிந்தோரின் பாசு ரத்துள்*
*மூழ்குவார்க்கு முகில்வண்ணன் காட்சி வாய்க்கும்;*
*சந்ததமும் தமிழ்ப்பாட்டின் இனிமைக் குள்ளே*
*சார்வோர்க்குப் பரமனருள் வாய்க்கும்; வாய்க்கும்!* 28

*சூழ்ந்தவினை வெல்லவேண்டி, நாளும் பாடல்*
*சொல்வாரின் திருவுள்ளம் இளமை தானே!*
*தாழ்வகற்றும் பிரபந்தப் பண்ணில் தம்மைத்*
*தருவாரின் திருவுள்ளம் பசுமை தானே!*
*ஆழ்வார்கள் பாசுரங்கள் உயிரின் வேட்கை*
*அவைதோயும் திருவுள்ளம் இனிமை தானே!*
*வாழ்நாளில் தமிழ்ப்பாட்டில் தோய்ந்து தோய்ந்து*
*வளமறியும் திருவுள்ளம் இறைமை தானே!* 29

*கனிகண்ணன் பின்சென்ற மாலைப் போலக்*
*கனிதமிழின் பின்செல்லும் நெஞ்ச மெல்லாம்*
*துணிவுடைய இந்நூலின் பின்னே சென்றால்*
*தொடர்வதெலாம் நலமொன்றே உண்மை; உண்மை!*
*மணிவண்ணன் புகழ்பாடி அருளும் பாடி*
*மானிடத்தின் வெற்றிதரும் பண்கள் பாடி*
*அணியாக நூல்மாலை ஏற்றுக் கொண்டால்*
*அடைவதெலாம் அவனருளே! திண்ணம், திண்ணம்!* *30*

* * *









## வடவேங்கடமும்திருவேங்கடமும்
## Vadavengadamum Thiruvengadamum


*டாக்டர்* ***அர. சிங்கார வடிவேலன்***

*எம்.ஏ., பிஎச்.டி., சி.ஜி.டி.,*
*தமிழ்ப் பேராசிரியர் - துறைத் துலைவர்*
*துணை முதல்வர் - சேவுகன் அண்ணாமலை கல்லூரி,*
*தேவகோட்டை - 623 302*


***அவர்கள் அன்புடன் உவந்தளித்த***

# சிறப்புப் பாயிரமாலை

***மானுடத்தின் வெற்றியென்றும் வாழ்க! வாழ்க !***

*1.* எப்போதும் ஏதேனும் எழுதிக் கொண்டும்
எழுபத்தா றகவையிலும் படித்துக் கொண்டும்
ஒப்பாய்வும் உறழாய்வும் செய்து கொண்டும்
ஒருநூறு அடையும்வரை உழைத்துக் கொண்டும்
மப்புடைய கார்முகில்போல் கருத்தைக் கொட்ட
மடிதற்று முந்துகின்ற என்றன் ஆசான்
**சுப்புரெட்டி யாரென்று** பெயர்சொன் னாலே
சுறுசுறுப்பும் பேருழைப்பும் துள்ளு மாமே.




2. அம்பதுக்கும் அறுபதுக்கும் இடைப்பட்டாண்டில்
அழகப்பர் பண்ணையிலே தமிழை நட்டார்;
நெம்புகோல் விஞ்ஞானம் கற்ற ஆசான்
நெடுமாலின் திருவருளால் தமிழைச் சேர்த்தார்;
அம்பலத்தில் ஆடாமல் அறைக்குள் ஆய்ந்தே
அறிவுலகப் பல்துறையில் நூல்கள் யாத்தார்;
சம்பளத்தை நம்பாமல் ரெட்டி யாரும்
தம்பலத்தை நம்பியும் செட்டி யாரே.

3. கட்டையுடல் கறுத்திருக்கும்; நூல்கள் மேய்ந்தே
கண்ணிரண்டும் சிவந்திருக்கும்; ஆய்வு செய்தே
பட்டையிட்ட திருநீறாய்ப் பழுத்த ஞானப்
பழமான தலையில்முடி வெளுத்திருக்கும்;
ஒட்டி வைத்தல் போலிருக்கும் உதட்டு மீசை
உரைகாரர் தேன்மூழ்கி நரைத்திருக்கும்
ரெட்டியார் தமிழ்ப்பரிசாய்க் கிடைத்ததற்கு
ரெட்டிப்பாய் வேங்கடத்தை வணங்கு வோமே.

4. அன்னைமொழி அவருக்குத் தெலுங்கென்றாலும்
ஆதிமொழி தமிழ்தன்னில் மேதை யானார்;
திண்ணைமொழி தேசமொழி உலகம் எங்கும்
திகழுமொழி அனைத்தினிலும் தேர்ச்சி மிக்கார்;
எண்ணம்மொழி செயல்யாவும் பெருமாள் என்றே
இலக்கியத்தில் 'ஆழங்கால்' படுவதாலே
கன்னல்மொழி இனிப்பது போல் ரெட்டி யாரின்
கையசையும் நூலாகி இனிக்கு தம்மா!

5. வெறுந்தரையில் குப்புறத்தால் படுத்துக் கொள்வார்;
விரித்தபடி பலநூல்கள் உடனி ருக்கும்;
குறுந்தொகையும் நெடுந்தொகையும் அணியும் யாப்பும்
கோள்நிலையும் வாள்நிலையும் கூறும் நூலும்
மருந்தியலும் உளவியலும் காதற் பாங்கும்
மடைதிறந்த வெள்ளமெனத் தலையில் நின்று
அருந்துகிற பாலாகிக் கையில் பாயும்;
அத்தனையும் தேனாகி நூலாய் மாறும்.




*6. ஆழ்வார்கள் பாசுரத்தில் மூழ்கி மூழ்கி*
*ஆழங்கால் படுவதவர் பிறவிப் பேறு;*
*வாழ்விக்கும் கருவிதரு விஞ்ஞா னத்தில்*
*வாய்த்திருக்கும் பேரறிவு கல்விப்பேறு;*
*ஆழ்வாரில் தலைமணியாம் நம்மாழ் வாரை*
*அருகணைய வாய்த்ததுவோ ஆய்வுப் பேறு;*
*பால்வார்க்கும் தாய்போலத் துறைகள் தோறும்*
*பலநூல்கள் அவர்யாத்தல் தமிழர் பேறே!*

*7. வேங்கடத்தை நடுவாக வைத்துக் கொண்டு*
*வெகுகாலப் பட்டறிவை வழங்கு கின்றார்;*
*வேங்கடத்தான் எம்பெருமான் வாழும் வீடு*
*வேங்கடமே எனநினைக்கும் வாய்க்கும் வீடு;*
*வேங்கடத்தான் இலக்கியத்தில் காலம் தோறும்*
*விளங்குவதை அழகாக விரித்துப் பேசி*
*வேங்கடத்தான் திருவடியில் சார்த்தும் மாலை*
*வெகுநேர்த்தி யாய்விளக்கும் இந்த நூலே.*

*8. இவ்வொரு நூல் படித்தாலே என்ன என்ன*
*எய்திடலாம் என்பதனைச் சுருங்கச் சொல்வேன்;*
*செவ்வையுறு வாழவுவரும்; வைண வத்தில்*
*தெளிவுவரும்; ஈட்டுரையில் தேன்கிடைக்கும்;*
*திவ்வியமாம் பிரபந்தத் திரட்டும் பாலும்*
*திருமாலின் அருளோடும் சேர்ந்து கிட்டும்;*
*ஒவ்வொருசொல் பிழையாக அச்சா னாலும்*
*உயர்திருமால் சௌலப்பியம் இந்த நூலே!*

*9. வாங்கியகை பூமணக்கும்; இந்த நூலை*
*வைத்த இடம் தேன் மணக்கும்; படித்து விட்டுத்*
*தூங்குகையில் திருமலையான் தென்றல் காற்று*
*துளபத்தின் நறுமணத்தை நெஞ்சில் தேக்கும்;*
*ஆங்காங்கே அருள்மணக்கும்; திவ்ய தேசம்*
*அடைந்தபயன் அத்தனையும் நொடியில் கிட்டும்;*
*பூங்குயிலாய் ஆசானின் புகழைப் பாடும்*
*பொற்பேறு மாணவன்என் பிறவிப் பேறே.*



10. *சொக்கலிங்கர் முருகப்பர் செட்டி நாட்டார்*
*சுடர்விட்ட புரட்சித்தீ கம்பன் தாசர்*
*தக்கவரின் திருநினைவால் மலரும் இந்நூல்*
*தகைசான்ற அவர் துணைவி புரட்சி அவ்வை*
*மிக்கவுயர்* ***பாசவல்லி மரக தம்மா***
*மேலான திருக்கையில் கொண்டாய்ச் சேரும்;*
*தக்கபடி நன்றியினைச் செலுத்தும் எங்கள்*
*தமிழாசான் உயர்பண்பு தொடர்க! வாழ்க!*

11. *எண்பதினை நெருங்குகிற என்றன் ஆசான்*
*இருபதுபோல் உடல்பெறுக! நூறும் காண்க!*
*கண்படைத்த பேரதனைத் தமிழர் நாட்டார்*
*களிபடைத்த அவர் நூலின் படிப்பால் காண்க!*
*விண் துடைத்த வேங்கடமும் அதன்மேல் தோன்றும்*
*விரிசுடரும் ஆசானைப் படிப்போர் கேட்போர்*
*மண்படைத்த உயிர்களினை அருளிக் காக்க*
***மானுடத்தின் வெற்றி யென்றும் வாழ்க! வாழ்க!***

* * *









*வாய்மொழியும் வாசகமும்*

**Vaaimozhiyum Vaasakamum**

*புலவர் பேராசிரியர் டாக்டர்* ***மா.வே. பசுபதி***

*எம்.ஏ., டி.லிட்., அவர்கள்*

*முதல்வர், ஸ்ரீ கா.சு.சு. கலைக் கல்லூரி*

*திருப்பனந்தாள் - தஞ்சை மாவட்டம்*

***அவர்கள் அன்புடன் உவந்தளித்த***

# <u>சிறப்புப் பாயிரப் பாமாலை</u>

*தமிழ்நலம் முற்றக் கற்றுத்*
*தனிவளம் செறிய நூல்கள்*
*அமிழ்தெனப் படைத்த செம்மல்*
*அருமைஎம் வேங்க டத்தான்*
*இமிழ்திரைப் பாற்க டல்போல்*
*இயல்துறை தன்றி னைவுக்*
*குமிழிகள் பலப டைத்த*
*குணாதிபன் வாழ்க வாழ்க!* 1




*அகவையை எட்டும் பன்னூல்*
*அமைத்தவர்; புதுமை கொஞ்சம்*
*தகவலை நிறைந்த ளிக்கும்*
*தனிப்பெரு மனிதர்; நெஞ்சிற்*
*புகவரி தாகும் நுண்மைப்*
*புலமையை எளிமை யாக்கிச்*
*சுகமுற வரையும் சுப்பு*
*ரெட்டியார் பணிகள் வாழ்க!* 2

*இமயமே என்ன ஓங்கி*
*இணையிலாப் பெருமை செய்யும்*
*சமயமே வரவா தாரம்;*
*சரித்திரம் தன்னை நோக்கி*
*அமைவன கூற லன்றி*
*அறிவியல் தன்னை நோக்கிச்*
*சமயத்தின் சிறப்பைச் சாற்றும்*
*சால்புநூல் இதுவொன் றென்பேன்.* 3

*வாசகன் வரைந்த தெய்வ*
*வாசகம் அனைத்தும் ஞான*
*வாசகம் ஒன்று மட்டும்*
*வழிவழிச் செய்தி சொன்னோம்*
*வாசகத் தறிவி யல்கள்*
*வாசனை வீசு மாறு*
*தேசுரக் காட்டும் இந்தத்*
*தமிழினை உலகம் போற்றும்.* 4

*ஆழ்வார்கள் அருளிப் பாட்டில்*
*அமைந்துள அழகுப் பாட்டில்*
*வீழ்வாரும் உய்யும் தெய்வ*
*விளக்கெனும் வாய்மொ ழிக்குள்*
*ஏழ்கட லுலகை ஈர்க்கும்*
*ஏற்றமார் அறிவி யல்கள்*
*ஊழிழ்த்துவே ரூன்றல் காட்டும்*
*உயர்நூலொன் றிதுவே யன்றோ?* 5




காதலித் திறமை இன்பக்
கவினெலாம் கண்டார் செய்தி
சீதமார் தமிழில் சிந்தைச்
செல்வமாய் விளக்கிச் சொல்லும்
மேதகு புகழ்மை யாளர்
மிகுதமிழ் சுப்பு ரெட்டி
சாதனை வரிக ளெல்லாம்
சரித்திர மாக வாழும். 6

ஈடுகள் அனைத்தும் தேர்ந்த
ஈடிலாப் புலமை யாளர்
ஈடுகள் தமக்கோர் ஈடாய்
இயற்றிய தமிழ்நூற் கோவை
பாடுவோர் மனத்தில் என்றும்
பசுமரத் தாணி யாகும்;
தேடுநற் புலவோ ருக்குச்
செப்புதல் அற்பு தங்கள் 7

சூட்சுமச் சொற்க ளுக்கும்
சுவைநலப் பொருள்கள் சொல்லித்
தேட்டமார் கவிமேற் கோள்கள்
திகழ்வுறப் பலவாய் வைத்தே
ஆட்கொளும் இறைமைத் தன்மை
அவையெலாம் வியக்கக் காட்டும்
ஈட்டமே இந்நூ லாகும்;
எழிற்புது வரவே யாகும். 8

வள்ளுவர் வாய்மொ ழிக்குள்
வளர்பல சமயக் கொள்கை
உள்ளவா(று) எடுத்துக் கூறும்
உயர்ந்தநல் ஒருமைப் பாடும்
தெள்ளிய கீதைக் குள்ளே
திகழ்ந்திடும் நுணுக்கச் செய்தி
கொள்ளெனக் கொடுக்கும் பாங்கும்
குவிகரம் கொண்டே ஏற்போம். 9




*சரணலால் சரணொன் றின்மை*
*சாதனை யெனவாழ்ந் துள்ளோர்*
*தரமெலாம் மந்தி ரத்துத்*
*திறத்தினால் எடுத்து ரைத்த*
*பரமகிழ் தேற்க வல்ல*
*பதத்தினை மெச்சு கின்றேன்;*
*வரதனம் முருகு பற்றி*
*வரைந்ததும் முருகே யன்றோ?* 10

*மன்னிய செழுந்த மிழ்க்கு*
*மகிமைகள் காட்டும் இந்நூல்*
*பன்னிய தெய்வ மேன்மைப்*
*பத்திமை மிகுக்கும் இந்நூல்*
*தென்னிலம் யாவினுள்ளும்*
*திகழ்ந்தொளி பரப்பு மாக!*
*இந்நிலை செய்த சுப்பு*
*ரெட்டியார் ஏற்றம் வாழ்க!* 11

* * *









*நவவித சம்பந்தம்*

**Navavitha Sambandham**

| |
|---|
| *உயர்திரு அருட்கவி* ***அரங்க சீனிவாசன்*** |

***அவர்கள் அன்புடன் உவந்தளித்த***

# <u>சிறப்புப் பாயிரப் பாமாலை</u>

*அகாரந்தான் எழுத்துமுதல் ஆதல் போல*
*அச்சுதனே அனைத்துயிர்க்கும்* **'அப்பன்'** *ஆவான்;*
*அகாரந்தான் எழுத்தொலிக்க உதவல் போல*
*அவன்தானே உயிர்வாழக்* **'காப்போன்'** *ஆவான்;*
*அகாராந்தான் இறுதியிலே மறைந்த நான்கன்*
*உருபால்கைங் கரியம்அறி வித்த லாலே*
*அகாரந்தான் பெரானோன் உயிர்கட் கெல்லாம்*
*ஆண்டைஎனும்* **'சேஷி'** *என அறிகின் றோமே.* *1*




*ஓங்காரத்து இடையில்எழுத்து உகாரம் ஆகும்;*
*ஒருவாத அநந்யம்எனும் தேற்றே காரம்;*
*பாங்கான உயிர்அனைத்தும் மகளிர் ஆவார்;*
*பகவன்அவன் பிரிக்கவொண்ணாக்* **'கணவன்'** *என்னும்;*
*நீங்காத உயிர்ப்பெயராம் மகாரந் தானே*
**'நினைந்தறியத் தகும்பிரமம்'** *அவனே என்னும்;*
*ஆங்காரம் அழிக்கின்ற நமஸ்ஸி னாலே*
*அவன்* **'உடையான்'***; நாம் 'உடைமை' என்று தேர்வோம்.* 2

*நாராய ணாயஎனில் சொற்கள் மூன்றாம்;*
*நாரந்தான் அசித்துச்சித்து அனைத்தி னுக்கும்*
*பேராகும்; அவற்றினையே உடலாய்க் கொண்டு*
*பிரியாமல் இயக்குதலால் அவன்* **'ச ரீரி'***;*
*வேராகும் அயனம்எனல் இருக்கும் தானம்;*
*விருப்பிடமாம் இருப்பிடத்துக்கு அவன்* **'ஆ தாரம்'**
*ஆராயின் எட்டெழுத்தே அதில்அ டங்கும்;*
*ஆழ்பொருளோ அளவிலவாம் வியப்புஈ தன்றோ?* 3

*ஆயஎனல் நான்கன்உரு பாகும்; இங்கே*
*அவ்வுருபை* **'பொருட்டு'** *என்றும் சொல்லு வார்கள்;*
*தூயன்அவன் அநுபவிக்கும் பொருட்டே, சித்துத்*
*தோன்றியுளது எனப்பொருளை விரித்து நோக்கின்*
*மாயவனே அநுபவிக்க உரியன்; அந்த*
*மாண்உரிமை வாய்த்தவன்பேர்* **'போக்தா'** *ஆகும்;*
*நேயமொடுஒன் பதுவகையில் உயிர்கட் கெல்லாம்*
*நீங்காத உறவாகி நின்றான் ஈசன்.* 4

*இவ்வுறவை அவன்அறுக்க முனைந்திட் டாலும்*
*இயலாது; நாம்அறுக்க இயல்வ துண்டோ?*
*எவ்வுறவும் அவன்ஆன தாலே அன்றோ*
*எம்முடனே ஒருவனாய்த் தோன்று கின்றான்?*
*தவ்வுறவே சேய்குழியில் வீழ்ந்த தென்றால்,*
*தாய் உடனே அக்குழியில் தாவி மீட்பாள்;*
*ஒவ்வுறவே பரன்அந்த வண்ணம் நம்முன்*
*உறவுநினைந்து அர்ச்சைவடி வாயி னானே!* 5




*ஐந்நிலைகள் தனக்குரிமை யாகக் கொண்ட*
*அமலனுக்குப் பணிபுரியக் கடன்பட் டுள்ளோம்;*
*மெய்நிலைய மாம்அவன்அக் கடனைக் கொள்ள*
*விழிஎதிரே நிற்கின்றான்; நாம்ஒப் போமேல்*
*நம்நிலையத் தூடுஅவனே அமர்ந்து கேட்பான்;*
*நாம்அதற்கும் இசையோமேல் நமைவி டாமல்,*
*பைந்நிலையப் பாயலிலே படுத்துக் கொண்டு*
*பார்என்பான் என்கடனைந் தீர்என் பானே!* 6

*ஒரு வணிகன் கடல்கடந்து பொருளைத் தேடி*
*ஓர்இருப தாண்டின்பின் திரும்பி வந்தான்;*
*பொருள்களைத்தன் இடத்தினிலே இறக்க லுற்றான்;*
*போந்தொருவன் இடைமறித்து ‘என்இடம்ஈது’ என்றான்;*
*இருவருமே பூசலிட்டார்; ஆங்கோர் ஆன்றோர்,*
*‘ஏன்பூசல்’? ‘நீர்தந்தை - மகனே’ என்றார்;*
*பொருதுபெரும் பூசலிட்ட கைத ளர்ந்து*
*பூசல்மறந்து உடல்நழுவிப் புளகுற் றாரே.* 7

*இப்படித்தான் பவக்கடலில் மூழ்கி மாழ்கி*
*இறைஉறவை மறந்துகயிங் கரியம் விட்டுத்*
*தப்படி நாம் இடுக்கின்றோம்; ஒருநல் லாசான்,*
*தளியுறவு நுமக்குண்டு என்று உபதே சிக்க*
*மைப்படியும் பேனியன்நம் தலைவன் என்று*
*வாஞ்சையினால் அறிந்துகொண்டு சரண்அ டைந்தே,*
*‘‘எப்படியும் பயன்படுத்து கென்போம்’’ ஆயின்*
*இப்படியில் பவக்கடல்தான் வற்றிடாதோ?* 8

*நவவிதசம் பந்தத்தை நாம்அ றிந்தால்*
*ஞாலத்தார் சகோ தரத்வம் சமத்வம், கொண்டே*
*அவவிதம்ஒன் றில்லாமல் ஒருமைப் பாட்டை*
*அடைந்திடுவோம்; உயிர்த்தொண்டே அரிதொண்டாகும்;*
*பவவிதனம் பறந்துவிடும்; வீடு பேறுஇப்*
*பாரினிலே இக்கணமே பலிக்க லாகும்;*
*தவஇதம்மிக் கெளிதாகும்; சமயம் சாதி*
*சச்சரவாம் நச்சரவம் சாம்பிச் சாகும்.* 9




ஆழ்வார்கள் தாம்அருளிச் செயல்என் கின்ற
அமுதொழுக விட்டனர், நாம் அமரர் ஆக;
ஏழ்பாரும் புகழ்தரும்நம் பிள்ளை ஆதி
எண்ணிலர்நல் உரைஎழுதி உபக ரித்தார்;
தாழ்வாதும் இலாதமணிப் பவள மாய், அத்
தனைஉரையும் இருப்பதனால், அதனைத் தேர்ந்தே
வாழ்வார விரும்புபவர் பலகால் கற்றும்
மலைமுட்டும் குருவிஎன மருண்டார் அம்மா! 10

ஆசார்ய இருதயமாம் மாறன் நெஞ்சை
அருளாள ராம்இளவல் அருளிச் செய்யத்,
தேசார் ஸ்ரீ வசனபூ டணத்தி னோடு
தெய்விகநல் இரகசியம் ஈரொன் பானும்
நேசானு கூலமுடன் உலகா சார்யர்
நிலத்துஎமர்க்குக் கொடையாக நேர்ந்து தந்தார்;
வாசாம கோசரமாய் அதனுள் நுட்பம்
மன்னுலகில் முடவனுக்குக் கொம்புத் தேனே! 11

விரியாத அரும்புகள்போல் உலகா சார்யார்
விண்டபொருள் நுட்பத்தை நன்கு தேறிச்
சரியாக மலர்த்துதற்கே வியாக்யா தாக்கள்
தாம்முயன்றும், தமிழ்மட்டும் அறிந்தோர் சற்றும்
தெரியாமல் தடுமாறும் நிலைக்கு இரங்கித்
தேசிகராம் **சுப்புரெட்டி யார்மு** யன்றே
எரியாத விளக்கதனை ஏற்றல் போல
எளியதமிழ் நடையினிலே விளக்கி னாரே! 12

பல்குரவர் பேருரைகள் அனைத்தும் கற்றுப்
பாரின்இயல் பொடுகலந்து தொகுத்துத் தந்தார்;
நல்குரவு மொழியில்இலா முன்னை ஆழ்வார்
நவில்வேத நுணுக்கமெலாம் திரட்டித் தந்தார்;
மல்குறவே சொல்வளரார்; சொல்சு ருக்கி,
வான்கதிரின் ஒளிதரல்போல் நுட்பம் ஈந்தார்;
வெல்குவர்யார் தெளிவுஎளிமை நுண்மை பெய்து
விரைந்துபல நூல்எழுதும் திறனை அம்மா! 13




*வண்திருவண் பரிசாரத்து உடைய நங்கை*
*மகன்அருளும் வாய்மொழியைத் தேர்ந்து தேர்ந்தே*
*எண்தகுசீர் டாக்டர் என்ற ஏற்றம் பெற்றார்;*
*இனியசட கோபன்செந் தமிழாம் நூலைக்*
*கண்டறிஞர் பாராட்டக் கண்டோம்; நூற்றுக்*
*கணக்கான நூல்அருளிக் கருணை செய்தார்;*
*மண்டலமேல் வைணவநூல் மட்டோ! சைவ*
*மாசமய நூல்களும்தந்து உயர்வு பெற்றார்.* 14

*வேங்கடவன் பல்கலையின் கழகந் தன்னில்*
*மேலான தமிழ்த்துறைக்குத் தலைவர் ஆனார்;*
*பாங்குடைய அறிவியலே ஆதி நூல்கள்*
*படைத்தமையால் பரிசுபல பலவே பெற்றார்;*
*ஈங்குலகில் இவர்தொடாத் துறைகள் உண்டோ!*
*இளைப்புச்சோர் வுகள்இவரை எட்டிப் பாரா!*
*தேங்கலில்ஆ யிரம்பிறைகாண் பருவத் துள்ளும்*
*செயற்கரிய செய்து பெருஞ் சீர்மை கொள்வார்.* 15

*சுறுசுறுப்பில் எறும்பு! உரையில்செங் கரும்பு!*
*துரிசில்லா உறுதிஇரும்பு! உளம்அ ரும்பு!*
*விறுவிறுப்புஇங் கிவர்எழுத்தில் நடன மாடும்;*
*வெலவெலத்துச் சோர்வுகளோ அப்பால் ஓடும்;*
*குறுகுறுப்பாய் விளையாடும் குமரர் கூடக்*
*குதூகலத்தி லேஇவர்க்குத் தோற்றுப் போவார்;*
*கிறுகிறுப்பும் வியப்பும்நமக்கு உண்டாம் - இன்னார்,*
*கீர்த்தியும்சொல் நேர்த்தியும்கொள் பூர்த்தி கண்டே.* 16

*அட்டப்பிர பந்தம்போல் ஷட்ப்ர பந்தம்*
*அருள்ஆள வந்தார்ஓர் இரட்டி யாரே!*
*கட்டப்ப படாதுஎளிமை தமிழ்க்குத் தந்த*
*காவடிச்சிந்து அணாமலைஓர் இரட்டி யாரே!*
*இட்டப்பட்டு எளியவர்க்கு ஈந்து, வெங்கை*
*எழிற்கோவில் அமைத்தவர்ஓர் இரட்டி யாரே!*
*மட்டுப்ப டாத*நவ **விதசம் பந்தம்**
*வழங்கியவர் நம்***சுப்பு இரட்டி யாரே!** 17




*சம்பந்தம் இறைவனுக்கும் நமக்கும் காட்டும்*
*தகவினால் உலகுக்கோர் ஆசான் ஆனார்;*
**'வெம்பந்தம் நீக்குதற்குப் பகவன் அன்றி**
**வேறில்லை'** *என்றுவழி காட்டி ஆனார்;*
*கம்பம்தன் அன்னைஎன உதித்த ஈசன்*
*கருணைஒளி பரப்பிஅருள் இரவி யானார்;*
*அம்புஅந்த வாலியின்மேல் எய்த ராமன்*
*அருட்குஇலக்கா கிய***சுப்பு இரட்டி யா***ரே!* 18

*சொல்லுக்கு நல்லமுதச் சுவையை ஏற்றிச்*
*சுவைப்பார்க்கு விருந்தூட்டும் வேளாண் செல்வர்;*
*நெல்லுக்குப் பதர்போல்வார் தாமும், ஈசன்*
*நீர்மைக்குஇங் குரியர்என உறுதி சொல்வோர்;*
*அல்லுக்குள் இரவிவர வழைப்ப தைப்போல்,*
*அகத்துக்குள் அன்புவிளக் கேற்றும் நல்லார்;*
*மல்லுக்கு நிற்காமல் சொற்கள் எல்லாம்*
*வசத்துக்குக் கொண்டுவரும் மாயச் சித்தர்.* 19

*ஆசாரி யரில்ஒருவர் இவரோ? அன்றி*
*ஆழ்வாரைப் பதினொருவர் செயவந் தாரோ?*
*பூசாரி யாய்த்தமிழை அருச்சித்து இங்கே*
*புதுக்கோவில் வந்தமரச் செயவந் தாரோ?*
*தேசாரத் திருநீறு பூசிச் சைவ*
*தேசிகரை நால்வர்எனச் செய்வந் தாரோ?*
*ஏசாமல் இருசமயத்து ஒருமைப் பாட்டை*
*ஏற்படுத்தும் நம்***சுப்பு இரட்டி யா***ரே!* 20

*திருத்துவதோ அழிப்பதுவோ அடித்த டித்துச்*
*சிந்தித்துச் சிந்தித்தே எழுது கோலை*
*இருத்துவதோ எழுதுவதை நிறுத்திக் கொஞ்சம்*
*எழுந்தோய்வு கொள்வதுவோ? கருத்துஇன் னொன்றைப்*
*பொருத்துவதோ செய்வதில்லை; ஏடு தன்னில்*
*புதுமுத்தம் கோப்பதுபோல், எழுதிச் செல்லும்*
*கருத்துவளம் மிக்கவர்; நற் கலையில் வல்லார்;*
*கனிந்தமனத் தினர்***சுப்பு இரட்டி யா***ரே!* 21

* * *







*அர்த்த பஞ்சகம்*

**Artha Panchakam**

*புலவர் **வீர. அரங்கனார்***

*தமிழாசிரியர் - தலைமையாசிரியர் (ஓய்வு)*

*நாராண்மைக் கழக உயர்நிலைப் பள்ளி,*

*விழுப்புரம்*

***அவர்கள் அன்புடன் உவந்தளித்த***

# <u>சிறப்புப் பாயிரப் பாமாலை</u>

1. *உலகு புகழ்* **வேங்கடத்துள்**
*ஓங்குபுகழ் தமிழ்த்துறைக்கு*
*அலகில்புகழ் சேர்த்தவராம்*
*ஆற்றல்மிகு தமிழ்த்தலைமை*
*நிலவிடவே முதல்வராய்*
*நிறுவனத்தின் தோன்றலவர்*
*குலவிடவே நம்சுப்பு*
*ரெட்டியார் சென்றார்கள்.*




*2. சென்றார்நம் வேங்கடவன்*
*பல்கலையின் கழகத்துள்,*
*நன்றாகும்* **தமிழ்த்துறையின்**
**துரையாகி** *நலஞ்சேர்த்து*
*குன்றாத கொள்கையெனக்*
*குலமனித நேயத்தால்*
*மன்றம்புகழ் மதிநலத்தால்*
*மாமனிசர் ஆனார்கள்.*

*3. மாமனிசர் இவரென்றால்*
*மாநிலந்தான் போற்றுகின்ற*
*சேமஞ்சேர் மலைக்கோடு*
*பெற்றதெனத் தமிழகத்தின்*
*மாமய்யம்* **திருச்சிமா**
**வட்டத்தின் துறையூர ார்**
*நாமுயர்ந்தோம் என்றுரைக்கும்*
**நல்லாசான்** *பொறுப்பேற்றார்.*

*4. நல்லாசான் நலஞ்சேர்க்கும்*
**துறையூரில்** *முதன்முதலில்*
*எல்லாரும் மகிழ்ந்திடவே*
**எங்கள் ஜமீன் துரையமைத்த**
*நல்லார்கள் போற்றிடவே*
**உயர்பள்ளி** *நண்ணியவர்*
*வல்லவராய் மிக உயர்ந்தோர்*
*வளங்கண்டார் மாண்புற்றார்.*

*5. வளங்கண்டு மாண்புற்றார்*
*வாழ்வுக்கு எற்றதென*
*உளங்கொண்டு* **ஆங்கிலத்தின்**
**உயர்பட்ட தாரிஇவர்**
*களங்கண்டார்* **நற்றலைமை**
**ஆசிரியர்** *ஆனாலும்*
*களம்காணும்* **கம்பன்கவி**
*நயத்தினையும் சுவைத்தளித்தார்.*



*6. கம்பன்கவி நலங்கண்டு*
*துடிக்குமந்நாள் தனிலாங்கோர்*
**கம்பன்அடிப் பொடியெனவே**
**தனைக்கூறி** *வாழ்ந்திட்ட*
*நம்பன் அவர்* **கணேசனார்**
*காரைக்குடி நகர்சிறக்க*
*அம்புவியோர் தாம்போற்ற*
**கல்லூரி** *அங்கமைத்தார்.*

*7. அங்கமைத்த* **அழகப்பா**
**கல்லூரி முதல்வரிவர்**
*தங்குபுகழ் செந்தமிழின்*
*திறந்தேர்ந்து ஆங்கிலமும்*
*பங்குபெறப் பயிற்றுவிக்கும்*
*பாவலராய்ப் பலநூல்கள்*
*சிங்காமல் எடுத்தெழுதிச்*
*சிந்திக்கும் பணியேற்றார்.*

*8. பணியேற்ற பண்பாளர்*
*பார்புகழ் வளர்கின்றார்*
*மணிவண்ண மாதவனார்*
**மாமலையாம் வேங்கடத்தின்**
*அணிசேர்க்க அழைத்தனால்*
**வாழ்வின்முடி** *யதுவெனவே*
*துணிந்தங்கே* **பல்கலையின்**
**தமிழ்த்தலைமை** *யோற்றிட்டார்.*

*9. தமிழ்த்தலைமைத் தொண்டர்தாம்*
*தந்தநூல் பலவாகும்*
*தமிழகத்துள் இவர்போன்று*
*நாளெல்லாம் ஆய்வெழுதிச்*
*சிமிழ்க்காமல் செப்புகின்றார்*
*சிலருளரோ எனக்கேட்டுக்*
*கமழ்கின்ற மணங்கண்டு*
*களிப்புறுவோம் நாமிங்கே.*



*10. களிப்புறுவோம் நாமிங்கே*
*காண்கின்றோம் கனிவோடு*
*சுளிக்கின்றோம்* **இவரகவை**
**எண்பதெனச்** *சொன்னாலும்*
*அளிக்கின்றார்* **தாத்தாவாய்**
*ஆழ்வார்கள் அநுபவத்தை*
*விளக்கமாய் அர்த்தபஞ்*
*சகத்தில் ஆழ்த்திவிட்டார்.*

*11. ஆழ்வார்கள் ஆழங்கால்*
*பட்டதெல்லாம் அளந்துரைக்கும்*
*வாழ்வாக* **அருங்கலைக்கோன்**
*வந்துதித்தார் வாழ்க! எனச்*
*சூழ்வோம் அவர்புகழைச்*
*சொல்வோம் சுவைத்திடுவோம்*
*வாழ்வோம்* **ஆயிரத்தில்**
**இவரொருவர்** *தாம்என்றே!*

*12.. ஆயிரத்தில் ஒருவராய்த்*
*தோன்றினார்* **அவருடைய**
**பாயிரத்தைப் பகர்கின்றேன்**
**பாமாலை சூட்டுகின்றேன்**
*தாயிரக்கம் பெற்றவர் தம்*
*தகைமையிது ஆதலினால்*
*நீவிரெலாம் கேட்டிடுவீர்*
*எனநினைந்து நீட்டுகின்றேன்*

*13. நீட்டுகின்றேன் வைணவத்தின்*
*நிகழ்விங்கு நிலவிடவே*
*கேட்டுவக்க வந்துள்ளோம்*
*கிளரிளமை செழித்திடவே*
*நாட்டமுடன் நாமுகந்து*
*நலம்பெற்று வாழ்த்திடுவோம்*
*தேட்டமுறு வைணவத்தின்*
*பிரபந்தம் போக்கியமே.*




14. வைணவத்தின் போக்கியமே
வரலாற்றின் வாய்ப்பாகும்
வைணவன்தான் நிறைவாக
விரவியதாம் பரவியதாம்
வைணவம் விஷ்ணுமயம்
என்றுரைத்தால் வயமதுவே
வைணவமே வையம்நிறை
பொருளாக வளர்ந்திடுமே.

15. வளர்ந்தேற்றம் பெற்றிடவே
வண்டமிழால் வேங்கடத்தெம்
உளந்தோய்ந்து உவந்திடவே
தூலொன்றை வெளியிட்டுக்
களங்காணும் அண்ணல்நம்
கலைமுதல்வர் வேங்கடத்தான்
தளர்ந்தோர்க்கு மனம்தேற்றும்
பஞ்சகத்தைத் தந்திட்டார்.

16. பஞ்சகத்துள் மனமிருத்தி
பரிந்துரைத்த வரிகளெலாம்
நெஞ்சகத்துட் கொள்வதற்கே
நேர்பட்டார் தம்நூலில்
எஞ்சகத்தார் ஏன்றுகொள
அருத்த பஞ்சத்தை
செஞ்சுவையில் செப்பியவை
சேமத்தின் நிலைக்களமே.

17. நிலைத்திடுவோம் நீணிலத்துள்
நிலவுகின்ற உயிர்களெலாம்
குலையாமல் இன்புற்று
வாழ்வதற்கே கூறியுளார்
மலைமீது விளக்காகி
மனிதரெலாம் மனங்கொளவே
கலையுரைத்து வைத்தவர்நம்
கவிமணியாம் டாக்டரிவர்.




*18.* **கவிமணிநம் டாக்டர் தாம்**
*மனந்திறந்து உணர்த்தியவை*
*செவிமணக்க* **மெய்ஞ்ஞானம்**
**சிந்திக்க விஞ்ஞானம்**
*செவியாரச் செப்புமித்*
*திருமகனை நாமெல்லாம்*
*குவிந்திங்கே கூடிடுவோம்*
*வாழிந்திடுவோம் வாழியநீர்.*

*19. வாழ்த்திடவே வாரீர்!*
*எனவணங்கிக் கூறுகின்றேன்*
*ஆழ்ந்தமன அன்போடும்*
*அருளோடும் அறிவுரைத்து*
*ஆழ்வார்கள் வாழ்வார்கள்*
*அதுவேநம் விழைவென்போம்*
*வாழ்த்துதுமே பல்லாண்டு*
*எனக்கூறி வாழ்த்துமே.*

* * *








## வைணவ செல்வம்
## Vainava Selvam

கல்விக்கடல் **S.K. இராமராஜன்** (கம்பராமன்)
(முன்னாள் துணைப்பதிப்பாசிரியர்
அகராதித்துறை, தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சை.)

## அவர்கள் அன்புடன் உவந்தளித்த
# சிறப்புப் பாயிரப் பாமாலை
## (தோரண வாயில்)

துங்கம் மேவிய சங்கரன் கோவிலைத்,
தூய்மை ஓங்கிய மாயோன் நகரினை
மங்க லந்தரு சத்தியின் கோட்டத்தை,
மணங்கொள் கந்தன் உறும்படை வீட்டினை,
ஐங்க ரற்குறித் தாய தளியினை,
ஐயன் வைகிய துய்யநற் பாழியை,
இங்கு யர்த்தி, மிலேச்சர் புரிந்திட்ட
இழிவை நீக்கி ஒளியினைத் தந்ததார்? 1




*வேதம் ஆகமம் போற்றிடும் தெய்வதம்*
*மேவு கின்ற பதிதொறும் கோபுரம்,*
*போத மேயென வானை யளத்திடப்*
*பொற்பின் ஓங்கப் படைத்த தெவர்கரம்?*
*சீத ளஞ்செறி சோலையைச் சாலையைத்*
*தெய்வப் பாற்கட லேநிகர் ஏரியை*
*ஆத ரத்திற் படைத்துல குய்கென*
*அவனிக் கீந்து மகிழ்ந்த தெவருளம்?* 2

*மறைகள் போற்றிடும் அங்கயற் கண்ணியார்*
*மாண்பி லாத மிலேச்சர் ஒழிந்திடக்*
*குறைவி லாதநற் சேனைகள் சூழ்தரக்*
*குன்றம் மேவிய வெம்புலி போலவே*
*நிறைவு கொண்ட பொலிவுடன் வம்மென*
*நேயத்தாலே யழைத்திட்ட போதினில்*
*பொறையொ டுற்றநம் கம்பணன் தோள்களில்*
*பூரிப் போங்கப் புகுந்திட்ட தீரர்யார்?* 3

*பொன்னி யாற்றில் துயின் றிடு மாயனும்,*
*புனித வேங்கடம் மேவிய அண்ணலும்,*
*மன்னு சோலை மலைசேர் அழகனும்,*
*வந்து வந்து தினமும் இரந்திடப்*
*பன்னு கூந்தலில் சூடி உதிர்த்திட்ட*
*பழைய கோதை வழங்கிய கோதைக்கு*
*நன்ன யஞ்செறி காவியக் கோவிலை*
*நயத்தின் நல்கிச் சிறப்பமை வேந்தர்யார்?* 4

*அற்பு தஞ்செறி பிள்ளைத் தமிழினை*
*அமுதம் தோற்க வழங்கும் குருபரர்,*
*பொற்ப தத்தினில் வீரக் கழலினைப்*
*பூட்டி ஞாலப் புகழினைத் தந்ததார்?*
*சிற்ப ரன்தனை இட்டலிங் கத்தினில்*
*சேவித் துள்ளப் புயலை யடக்கிய*
*கற்பின் மிக்க சிவப்பிர காசரைக்*
*கவிஞர் வேந்தெனப் பரவிப் புகழ்ந்ததார்?* 5



*சங்க நூற்குச் செவிலி எனத்தகும்*
*சால்பு மிக்கநம் ஐயர்க் கிளமையில்*
*பொங்கு செந்தமிழ் யாப்புறு நுட்பத்தைப்*
*புகன்று ஞானத் தெளிவினைத் தந்ததார்?*
*துங்க வாழ்வருள் பஞ்ச தசியினைத்*
*தூய நற்றமி ழாற்படைத் திட்டதார்?*
*அங்க வர்க்குச் சமாதியைக் கோயிலால்*
*ஆக்கி வேத வரம்பினைக் காத்ததார்?* 6

*கீரன் நல்கிய ஆற்றுப் படையினால்*
*கிளர்ச்சி பெற்ற முருகன் புயத்தினில்*
*சீர மைந்திடு காவடிச் சிந்தினைச்*
*செழிக்கச் சூடி மகிழ்ச்சி வளர்த்ததார்?*
*வீரம் மேவிய காவியக் கம்பனே*
*மேவிப் பாடினான் காந்தி கதையென*
*பார காவியம் இங்கு படைத்ததார்?*
*பண்டைச் சந்தங்கள் மீளக் கொணர்ந்ததார்?* 7

*'வான மோமழை பெய்திடும், பூமியோ*
*மாண்பின் ஓங்க விளைந்திடும், புல்லனே*
*ஊனம் மேவிய வரியைத் தரேன்' என*
*ஓதி வீரப் புயலை விளைத்ததார்?*
*மானம் நோக்கிய சானகி நாயகன்*
*மல்லல் தோள்களில் நல்லருள் பொங்கிடத்*
*தேன ளாவிய கீர்த்தனை தந்ததார்?*
*தேவ கானத்தை வாழ்வுறக் காத்ததார்?* 8

*மங்க லம்பொவி பாகதம் நல்கிய*
*மாசிலாதொளிர் சப்த சதியினை*
*பங்க மற்ற குறுந்தொகை நாணுறப்*
*பண்பி னோடு படைத்த தெவர்செயல்?*
*துங்க மார்கும ரேசவெண் பாவினை*
*தூய நற்குறள் மணியைப் பதித்தெழில்*
*பொங்கச் செய்து தமிழர்கள் வாழ்வினில்*
*புனித வாழ்வை மலர்ந்திடச் செய்ததார்?* 9




*அற்பு தஞ்செறி பாரதம் நல்கிய*
*அரங்க நாதர் சிவிகை சுமந்ததார்?*
*பொற்பு மேவிய கூடற் கலம்பகம்*
*போத நாதனின் தோளில் புனைந்ததார்?*
*சிற்ப மேயென ஈட்டுரை நற்றமிழ்*
*செம்மை யோங்க மொழிபெயர்த் திட்டதார்?*
*நற்க லைக்கு விருதாயக் கலைமகள்*
*நயக்கும் பிள்ளைத் தமிழைப் புனைந்ததார்?* 10

*குன்றம் ஏந்திக் குளிர்மழை காத்தவன்,*
*கோதி லாதநம் மாயவன் காதையை*
*அன்று நம்முடைய ஐயர் உளத்தினில்*
*அறிவின் வித்திச் செறிவுறக் காத்ததார்?*
*வென்றி சேர்அரி சமயதீ பத்தினை*
*விளக்கத்தோடு களிப்புறத் தந்ததார்?*
*மன்று போற்றிடும் மாறனின் கோவையை*
*மாநி லத்தினில் படர விடுத்ததார்?* 11

*மங்க லத்தமிழ்த் தென்றல் திரு.வி.க.*
*மயிலைக் காப்பியர் என்று புகழ்ந்திடப்*
*பங்க மற்ற கபில பரணரைப்*
*பண்பின் ஈந்து தமிழைப் புரந்ததார்?*
*துங்கம் மேவு திருவருட் பாவினால்*
*தூய்மை பெற்றுத் தமிழக மாண்பினை*
*இங்க யர்த்திட நல்ல முதல்வராய்*
*ஏற்றம் பெற்று பொலிவினைத் தந்ததார்?* 12

*வேந்தர் வைகும் அரண்மனை போன்றதம்*
*வீட்டை நூலகம் ஆக்கும் முதல்வர்யார்?*
*காந்தி யொத்த வினோபா மலர்ந்திடக்*
*கனிந்து தந்த நிலக்கொடை யாளர்யார்?*
*சாந்த மேவடி வாகித் தழைத்திட்ட*
*சால்பி னாலே நிலங்கள் அனைத்தையும்*
*வாய்ந்த சத்திரம் கொள்கென கல்கிய*
*வாய்ந்த வேந்தரைத் தந்த தெவர்குளம்?* 13




*மங்க லந்தரு பிங்கள சூரண்ணா*
*மகிழந்து தந்த சிலேடைப் பனுவலைத்*
*துங்க நற்றமி ழில்வடித் திட்டதார்?*
*தூய்மை ஓங்க அதற்குரை தந்ததார்?*
*சங்கம் மேவு பவணந்தி நூலுக்குத்*
*தக்க நல்லுரை நல்கிக் களித்ததார்?*
*பொங்கு வைணவம் நன்கு மலர்ந்திடப்*
*புவன கிரியில் உதித்திட்ட சோதியார்?* 14

*போதம் நல்கும் பதும புராணத்தை*
*புனிதக் காப்பிய வடிவில் சமைத்ததார்?*
*சீத ளஞ்செறி தலைமலை மாலுக்கு*
*செப்பம் மிக்க சதகம் படைத்ததார்?*
*ஏத மற்றொளிர் சாரீ ரகத்தினை*
*எளிமை யாக்கிப் புகழை வளர்த்ததார்?*
*நாதன் கம்பன் புனிதப் பனுவலை*
*நலங்கொள் ஞானத் தெலுங்கில் இசைத்ததார்?* 15

*பதின்மர் ஓதிய பாசுரச் சாரமாய்ப்*
*பண்பின் ஓங்கும் அறிஞர்க் கமுதமாய்த்*
*துதிகொள் அட்டப் பிரபந்தம் நல்கிய*
*தூய அந்தணர் தம்மைப் புரந்ததார்?*
*மதியின் மாண்பினால் மாயமில் கொள்கையால்*
*மன்னு பொதிய மலைமுனி நாணுறப்*
*புதிய செந்தமிழ் 'நம்பெரு மாள்' எனப்*
*புலவர்க் கீந்து வளமுறக் காத்ததார்?* 16

*மாசி லாதநற் காதல் மதுவினால்*
*மாண்பு மிக்கொளிர் கற்பின் திறத்தினால்*
*காசி லாத மதுரா விஜயத்தால்*
*கணவன் தோள்களில் பூரிப்பைத் தந்ததார்?*
*தேசம் போற்றிடும் வள்ளுவர் போலவும்*
*சித்தர் ஒப்பவும், புத்தர் உறழவும்*
*நேசம் ஓங்கிய பத்தியம் தந்ததார்?*
*நெஞ்சந் தோறும் இருளைத் தொலைத்ததார்?* 17




*தேசி கன்பெறு நூற்குரை நல்கிய*
*தெய்வ மாண்புறு தீட்சிதர் தம்மையும்*
*மாசி லாச்சிவ லீலார் ணவந்தரு*
*மாண்பில் ஓங்கிய தீட்சிதர் தம்மையும்*
*பாச மோடு கனிவிற் புரந்ததார்?*
*பரத்தின் மாண்புறு காகுத்த வள்ளற்கு*
*நேசம் ஓங்கும் கலியன் மடல்என*
*நிகரில் சிற்பம்கொள் கோயில் படைத்ததார்?* 18

*மூன்று குற்றம் அகற்றிய ஞானிக்கு*
*முழங்கு வேதப் பெரும்புக ழானுக்கே*
*ஆன்ற ஞானப் பனுவல் படைத்ததார்?*
*அவன்றன் மாண்பினில் தன்னைக் கரைத்ததார்?*
*ஈன்ற தாயெனத் தன்மம் மலர்ந்திட*
*இணையில் செல்வத்தைப் பங்கிட்டுத் தந்ததார்?*
*வான்ற ரும்புகழ் இவ்வயின் நாட்டிய*
*வள்ளுவர்க் கொரு காப்பியம் தந்ததார்?* 19

*அல்லல் நீக்கிய தென்திரு வேங்கடத்*
*தருளைத் தேக்கிய நல்லடி வாரத்துச்*
*செல்லல் நீக்கிய மால்நெறி காத்திட்ட*
*தேசி கற்கொரு கோட்டம் சமைத்ததார்?*
*கொல்லல் போக்கும் நெறியை உயிர்ப்பித்த*
*கோதில் வள்ளலார் தம்மைப் புரந்ததார்?*
*மல்லர் ஓங்கு சமயம் புரந்திட*
*மாசில் சந்நிதி நெறியினைத் தந்ததார்?* 20

*கோவை வாய்ச்சி யிடைச்சி யுருக்கொடு*
*கோவ லன்றரும் போகம் நுகர்ந்திடப்*
*பாவை நன்னெறி நல்கிய பாவைக்குப்*
*பரத்தைத் தொட்டிடும் கோபுரம் தந்ததார்?*
*நாவை யாட்கொளும் மந்திரிக் கோவையை*
*நம்பன் சூடிட, அன்புறு வள்ளுவத்*
*தேவை சால உயர்த்துமுப் பாலெனத்*
*திட்ப நுட்பங்கொள் கோயில் படைத்ததார்?* 21




*உறங்கு கின்ற முனிவன் சிரமென*
*ஒளிரும் தலைமலை மேவிய மாயற்கு*
*நிறங்க லாவிய தாண்டகம் தந்ததால்*
*நேயம் ஓங்கும் கெடியினைப் பெற்றதார்?*
*பிறங்கு சித்தர் சிவப்பிர காசற்குப்*
*பெரிய நன்மடம் உரிமை யுடனமைத்*
*தறம்கு லாவக் கழனிகள் தந்ததார்?*
*அரிய வீர சைவத்தைக் காத்ததார்?* 22

**மடை**

*இங்கண் பற்பல் வினாக்கள் தொடுத்திடின்*
*ஏற்ற நல்ல விடைப்பொருள் ஆனவர்*
*மங்க லந்தரு கொற்றத் தெலுங்கராம்;*
*மாண்பி னாலிவர் இங்கு வராவிடின்*
*பொங்கு தென்னகம் வேறொரு தேசமாய்ப்,*
*புலிகள் பாம்புகள் மேவும் வனங்களாய்ச்*
*சங்கை யற்றுத் துயரம் விளைத்திடும்*
*சரத நான்மறைப் பனுவல் இருக்குமோ?* 23

*தெள்ளி தாகிய வள்ளுவன் மாக்குறள்,*
*தேசம் போற்றும் சிலம்பொடு மேகலை,*
*ஒள்ளி தாய அகம், புறம், நான்மறை,*
*ஒப்பி லாத திருமுறை, வாய்மொழி,*
*வள்ளி யோர்புகழ் நல்லிசைச், சிற்பங்கள்,*
*வளத்தின் மிக்குயர் கோயில்கள் யாவுமே*
*எள்ள ரும்புகழ்த் தெலுங்கரால் வாழ்வெய்தி*
*இன்பம் ஓங்க அவர்களை வாழ்த்துமால்* 24

*வேதம் காத்திட வேள்விகள் காத்திட*
*வீறு மிக்க சமயத்தைக் காத்திட*
*போத மோடிங்கு வந்த தெலுங்கரின்*
*பொலிவு மிக்க மரபு செழித்திட*
*ஆத வன்னெனத் தோன்றிக் குலப்புகழ்*
*அன்பிற் புரந்திட்ட நம்சுப்பு ரெட்டியின்*
*சாத னைக்கு வரம்பில்லை இல்லையே*
*சால்பின் மிக்கவர் இஃதறி வாரரோ* 25



### வேறு

*பழவிறல் ரெட்டி குலத்தவர் முன்பு*
*பண்பையும் பொருளையும் ஆழ்ந்த*
*உழவிடை, விளைத்தார்; முகில்புரி சதிகள்*
*ஓட்டிய காலவெள் ளத்தால்,*
*தழைவினை இழந்தார்; துன்பத்தில் உழந்தார்;*
*தகவுடன் இவர்களால் வாழ்ந்தோர்,*
*விழைவினை ஒதுக்கித் தூற்றினார்; நன்றி*
*மெல்லிய அனிச்சப்பூ அன்றோ?* 26

*சிந்தனைச் செல்வச் செழிப்பினைப் பிறப்பால்*
*சிறப்பினைப் பெறுசுப்பு ரெட்டிசெம்மல்*
*சந்தமார் இளமைப் பருவத்தில் வறுமைச்*
*சலதியின் ஆழத்தைக் கண்டார்;*
*விந்தையாம் வறுமை இளமையில் பொறுப்பை*
*வியப்புறத் தந்தது; அதனால்*
*புந்தியில் சிறிதும் தீநெறி புகுதாப்*
*பொலிவினைப் பெற்றனர் அம்மா.* 27

*இந்தளம் தன்னில் தோன்றிய மலர்போல்*
*இடருறு நம்சுப்பு ரெட்டிசெம்மல்*
*வந்தது கண்டு மனஞ்சலி யாது*
*மாண்புடன் வாழ்ந்தனர்; அந்தோ!*
*தந்தையை இழந்த தனயனை அணைத்துச்*
*சால்புறு மொழிகளால் தேற்றும்*
*பந்தமார் சீல அன்னையின் அருளால்*
*படிப்பினில், அறிவினில் முதிர்ந்தார்* 28

*நலத்தினை வழங்கும் கலைமகள் பொருட்டா*
*நவையறு முன்னவர் படைத்த*
*நிலத்தினை விற்றார்; புலத்தினை விற்றார்;*
*நிலைபெறு பட்டங்கள் பெற்றார்*
*சலத்தினைப் புரிந்த ஞாதிகள் பகையைச்*
*சாதுரி யத்தினால் வென்றார்*
*குலத்தினுக் கமைந்த ஞானநற் பெயரைக்*
*குறைவறக் காத்தனர் அம்மா.* 29




*அடக்கரும் சினத்தால் புல்லிய பகைவர்*
*அமைவுறு வாழ்க்கையின் நெறியில்*
*தடைக் கற்கள் இட்டார்; ஐயகோ! அந்தச்*
*சால்பிலார் நாணுற அதனைப்*
*படிக்கற்கள் ஆக்கி மென்மெல நடந்து*
*பாரகத் துயர்ந்தனர்; அந்த*
*வடக்கினில் இருக்கும் மாலருள் உற்றால்*
*வாதனை சாதனை யாமால்.* 30

*வேங்கடக் குன்றத் தெம்பிரான் நல்கும்*
*வித்தக நல்லருட் டிறத்தால்*
*தீங்கறத் தோங்கும் நம்சுப்பு செம்மல்*
*செவ்விய கலைவளத் தோடு*
*பாங்கொடு நூல்கள் படைத்தனர்; கற்றோர்*
*பண்புறப் போற்றினர்; அற்பர்*
*வாங்கிடற் கரிய பொறாமையில் வீழ்ந்தார்;*
*மானுடர் அழுக்காற்றின் வடிவோ?* 31

*மாறுபா டில்லா இலக்கியம் வரை*
*மாண்புறும் அறிவியல் வளர*
*நூறு நூல் தந்தார்; இன்னும் பன்நூல்கள்*
*நுட்பமாய் வரைந்திட உள்ளார்;*
*கூறபா டுற்ற அகத்தெழு நினைவுக்*
*குமிழிகள் உணர்வினில் சமைத்தார்;*
*தேறுசீர் சான்ற அப்பெரு நூற்குள்*
*சிந்தனைச் செல்வங்கள் உளவால்!* 32

*காதலைப் பெற்றும் பொன்னுடல் பெற்றும்*
*கலைநிறை போகங்கள் பெற்றும்*
*மாதக வுடைய புத்திரர் இன்றி*
*வாட்டமுற் றொடுங்கிய ஒருவர்,*
*ஏதமற் றேங்கும் நல்லறி வருளும்*
*இல்லற நெறியினைப் பயின்று*
*போதமார் மழலைச் செல்வங்கள் பெற்றுப்*
*பொலிகின்றார்; அறிவியல் வாழி!* 33



*பருவம தறிந்து நன்மழை பொழியும்*
*பாங்குறு காரென, யாண்டும்*
*பெருகிய இருளில் வழிதெரி யாது*
*பேதுறு கலத்தினைக் காக்கும்*
*துருவமீன் என்னத், தனையடைந் திட்ட*
*தோமிலா இளையடாக் டருக்குப்*
*பெருநெறி காட்டும் நம்சுப்பு ரெட்டி*
*பெருந்தன்மை வாழிய நன்றே.* *34*

**வேறு**

*செப்பம் மிக்கநம் செம்மலின் நெற்றியில்*
*திகழும் நீற்றொளி யாண்டும் பரவலால்*
*ஒப்பற் றோங்கும் வைணவ மார்க்கத்தில்*
*உலாவி வேங்கட மாலருள் எய்தினார்*
*துப்புற் றோங்கும் வைணவ ஞானத்தால்*
*தூய நால்வரின் புனித நெறியினை*
*இப்பு விக்கண் விளக்கிட வல்லவர்;*
*இவர்தம் தொண்டு மிகவும் பெரியதால்.* *35*

*சிரிக்கச் சிரிப்பு பகருப மானத்தால்*
*சிந்த னைக்குமெட் டாத பொருளினை*
*விரித்துக் காட்டித் தெரிவிக்க வல்லவர்;*
*வெகுளி யோடு பகையினைச் சாடுங்கால்*
*எரிக்கும் காண்டவத் தீயொப்பர் என்னினும்,*
*இதயம் மேவும் அமைதியைக் காப்பவர்;*
*அரிக்கும் வஞ்சம் சற்றும் புகுந்திடா*
*ஆண்மை மிக்கவர்; பண்புறு வானவர்,* *36*

*நாத்தி கஞ்செறி குற்றக் குழுவினுள்*
*நன்மை கண்டிடில் போற்றிடக் கற்றவர்,*
*ஆத்தி கந்தனில் புல்லர் புகுத்திய*
*அற்பப் புன்மையைச் சாடி எதிர்ப்பவர்*
*காத்தி ருத்தலும் உண்மையை நோக்கலும்,*
*கவலை யற்று நடுநிலை நிற்றலும்,*
*பூத்தி ருக்கும் மலரென வாழ்தலும்,*
*பொலிவு மிக்கநம் ரெட்டி சமயமாம்.* *37*




*சத்தி யப்பெரு குன்றினில் மேவிய*
*சால்பு மிக்கவிஞ் ஞானநற் பார்வையால்*
*எத்தி றத்தினும் ஏழுல கும்புகழ்*
*ஏற்றம் பெற்றவர்! மாற்றம் இலாதவர்*
*சித்தி நல்கிடும் இல்லற மார்க்கத்தைச்*
*செப்பும் போதிவர் வாற்சா யனமுனி,*
*புத்தி யாலுயர் அணுவை விளக்குங்கால்*
*பொலிவு மிக்க ஐன்ஸ் டீனும் இவரன்றோ?* 38

*அண்ணல் மேவிய தெய்வத் தலந்தொறும்*
*ஆழ்வார் நல்கிய பாசுரக் கண்கொடு*
*கண்ணன் ஆடலை முற்றும் சுவைத்தவர்:*
*கனிவி னாலுளத் தெளிவினைப் பெற்றவர்:*
*பண்ண மைந்த இலக்கியம் யாவையும்*
*பரிந்து போற்றித் திறங்களை நோக்குவோர்:*
*எண்ணம் யாவையும் வேங்கட மால்பதத்*
*தினிதில் வைத்தவர்; முனிவைத் துறந்தவர்.* 39

*ஆடல் வல்லவன் அற்புதக் கூத்தினில்*
*ஆழங் காற்பட்ட நால்வர் நெறியினைப்*
*பாடல் சான்ற புலனெறிக் கண்கொடு*
*பண்பின் நோக்கி உலகியல் மாந்தர்க்கு*
*நாட கஞ்சேர் வழக்கினில் ஈந்தவர்;*
*நாலி ரண்டில ஐந்தினைப் பெற்றவர்*
*வாட வாடப் பரிமளம் உற்றிடும்*
*வகுள மாலைபோல புகழில் உயர்ந்தவர்.* 40

*செம்பின் மேவும் களிம்பாய் உயிர்தொறும்*
*சேர்ந்த ஆணவம் நீக்கிடத் தில்லைவாழ்*
*நம்பி ரானிரு வன்மலம் சேர்த்ததை*
*நாட்டு சைவ சமய விளக்கினால்*
*வெம்பு கின்ற உயிர்க்கிடர் நல்கிடும்*
*வெய்ய தாய இருளை ஒதுக்கியே*
*நம்பு முத்தி நெறியை அறிந்திடும்*
*ஞானம் மிக்கவர் ஈனம் தொலைத்தவர்.* 41




*நலம்பொ லிந்திடு நல்லப்ப ரெட்டியின்*
*குலம்பு ரிந்திடு கோதில் தவப்பயன்;*
*கனிவு மிக்கநல் காமாட்சி யம்மையின்*
*இனிய நோன்பில் எழுந்த கலைச்சுடர்;*
*பாங்குறு கர்ண பால கோத்திரம்*
*ஓங்குற வந்த உத்தம நம்பி; என்றே*
*சான்றவர் புகழும் சால்பும் சிறப்பும்*
*தோன்ற மலர்ந்தவர் தொல்கலை யாய்ந்தார்.* 42

*செப்பமார் தங்கள் குலத்தவர் முன்பு*
*திருவளர் பாரத சமயம்*
*ஒப்பிலா தோங்கப் படையுடன் வந்த*
*உண்மையை மறந்திடா மையினால்*
*திப்பியம் சான்ற வைணவ சைவச்*
*சிறப்பினைக் கண்ணினுக் குள்ளே*
*வைப்பென வைத்துப் புரப்பவர் இவர்தம்*
*மாண்பினை உலகெலாம் அறிக.* 43

*மதுமலி துளபத் தாரணி மாயோன்,*
*மற்றவன் தங்கையாய் உதித்த*
*விதுமுகக் காமக் கோட்டத்து நங்கை,*
*விருப்புடன் அவள்கரம் பிடித்துப்*
*புதுமையாய்ப் பொலிவும் ஏகம்பன் - இவர்கள்*
*பொலிவுடன் அமர்ந்திட மலர்ந்த*
*எதுமலை போல விரிந்திடும் உளத்தார்*
*இருசம யத்தொளி பெற்றார்.* 44

*எள்ளுதற் குரிய சாதிவேற் றுமைகள்,*
*இடர்செயும் சமயவேற் றுமைகள்*
*பொள்ளென வருத்தும் வருணவேற் றுமைகள்*
*புறப்புறத் தேகிட, முற்றுப்*
*புள்ளியை வைத்த எதுமலைக் கோயில்*
*புகட்டிய நல்வழி கண்டு*
*தெள்ளிய ஞானம் பெற்றநம் சுப்பு*
*தேர்ந்தனர் சமரச ஞானம்.* 45




*நஞ்சையும் அமுதாய் மாற்றுமிச் சமயம்,*
*நவைகளை இதயமாய்ப் பெற்ற*
*வஞ்சகர் செருக்கால் இழிவினைப் பெற்று*
*வாடுதல் கண்டநம் சுப்பு,*
*செஞ்செவே யாய்ந்து சமரசம் என்னும்*
*சீரிய மருந்தினை நல்கி,*
*மஞ்செனக் காத்தார், வேதத்து மரபை*
*மாண்புறப் பேணினர் அம்மா* *46*

*உலகவா சனையை யறிந்திடா ஞான*
*உத்தமர் நஞ்சட கோபர்*
*நலமுறு தெய்வ வாய்மொா யாய்ந்து*
*நல்லபண் டாரகர் ஆகி*
*அலகிலாப் புகழைப் பெற்றவர்; சான்றோர்*
*அருங்கலைக் கோண்எனப் போற்றப்*
*புலமையை வளர்த்தார்; அருட்சட கோபன்*
*பொன்னடி எனும்புகழ் உற்றார்.* *47*

*புலவீர் !*

*''உறவினர் தம்மை யுறவினர் புகழ்தல்*
*உலகத்தின் இயற்கையே'' என்று*
*திறமுறக் கருதா துண்மையைக் காண்மின்*
*சகத்துறு புலவர்கள் தங்கள்*
*அறமமை யுளத்தும் பொறாமையைத் தாக்க*
*அமைந்தஇக் கலைஞரின் ஒளியை*
*நிறமுறப் போற்றல் சான்றவர் கடனாம்;*
*நெஞ்சினைத் திருத்துமின் சற்றே.* *48*

*வேங்கடத் தப்பன் அருளினால், முதுமை*
*விடை கொள்ள இளமையை அழைக்கும்*
*பாங்குறும் இந்த அருங்கலைக் கோன்நம்*
*பாக்கியம் ஒன்றுபட் டதனால்*
*ஓங்கிய புகழ்சால்* **வைணவச் செல்வம்**
*உதவினார்; இப்பெரு நூலைத்*
*தாங்குதல் புலவர் தங்கடன் அதனால்*
*தத்துவ சரித்திரம் புலனாம்.* *49*

### வேறு

வைணவ சமய மாண்பினை இந்நூல்
கைவண நெல்லிக் கனிபோல் காட்டும்
வேதப் பனுவல் யோகக் கண்ணால்
போதக் கண்ட புண்ணிய வடிவம்
முப்புவ னத்தையும் மூவடி கொண்டு
திட்பமாய் அளந்த செஞ்சுடர் என்றும்,
பூரண ஞானிகள் பொலிவுறக் கண்ட
காரண முதல்வன் நாரணன் என்றும்,
சத்தியம் பேசும் சரித்திரம் கண்டது
சித்திசால் வாசு தேவன் என்றும்,
மல்லிகை முல்லை மணங்கமழ் காட்டில்
நல்லியல் வேய்ங்குழல் நலமுற ஏந்திப்
பண்களை விதைத்துப் பத்தியை வளர்த்துக்
கண்களுக் கொளிதரும் கண்ணன் என்றும்,
பலவகை யாகப் பரவிடும் பரம்பொருள்
நலமமை ஆழ்வார் நயந்ததே என்று
திறமுற ஆய்ந்து செயமுறக் காட்டும்
வரன்முறை அறிதல் மாண்புடைத் தம்மா. 50

### வேறு

நாரணனே உலகமெனும் உடலி னுக்கு
நல்லுயிராய் அமைந்துள்ளான் என்னும் மாண்பைப்
பூரணமார் பிரகதா ரணியம் என்னும்
புனிதநூல் விளக்குவதை இந்நூல் ஓதும். 51

கற்றவர்கள் புகழ்கிரேக்க நாட்டுத் தூதன்
கருடத்தூண் நிறுவியதைப், பத்தி யோடு
பெற்றமிகு பாகவத னாகத் தன்னைப்
பேசுகின்ற தனிமாண்பை இந்நூல் பேசும். 52

பெற்றமிகு பாணினிக்கு விளக்கம் தந்த
பேரறிஞர் பதஞ்சலியார் வாசுதேவன்
நற்றவர்கள் கொண்டாடும் இறைவன் என்று
நவில்கின்ற உண்மையினை இந்நூல் காட்டும். 53




### வேறு

*மெய்ப்பொருளின் களஞ்சியமாம் பாரதத்தில்*
*வைணவத்தின் விளக்கம் யாவும்*
*செப்பமுறப் புகல்வதனை ஆராய்ந்து*
*மாண்புடனே செப்பம் இந்நூல்.* *54*

*நற்றருமம் அகிம்சையுடன் இல்லறத்தை*
*நடாத்தியதால் நாதன் அங்கு*
*பெற்றமிகு நரனோடு நாரணனாம்*
*தனிமாண்பைப் பேசும் இந்நூல்* *55*

*போர்க்களத்தில் நம்பெருமான் கீதையினில்*
*பேசியது பொலிவு மிக்குச்*
*சீர்த்தியமை நல்வாசு தேவவழி*
*பாடென்று செப்பும் இந்நூல்.* *56*

### வேறு

*வேதம் போற்றிடும் வித்தக நாதனும்,*
*விரித்த ஆகமம் கணித்த தலைவனும்*
*போதம் பெற்றுயர் அற்புத மாயனும்*
*புனித நாரணன் ஆயினன் என்பதை,* *57*
*மங்க லஞ்செறி சத்த பிதியின்கண்*
*மருவு நல்வழி காட்டும் இறைவனும்,*
*பொங்கு சீர்த்திகொள் விட்டுணு தேவனும்*
*புவியில் ஒன்றாய் மலர்ந்த முறைமையை,* *58*

*மறைகள் போற்றிடும் மாண்புறு தெய்வதம்,*
*மகிழ்வில் ஓங்கிடும் கோபால கிருட்டிணன்,*
*நிறைவு மிக்கவர் ஒன்றெனக் கண்டுதம்*
*நேயத் தோங்கி வளர்ந்த புலமையை,*

### வேறு

*தொகுத்தும் விரித்தும் வகுத்தும் இந்நூல்*
*பகுத்துப் பகுத்துப் பராவி மகிழும்.* *59*

### வேறு

*வேதமுடன் இதிகாச புராணம் யாவும்*
*வேள்வியினால் உயிர்உய்யும் வழியைக் காட்டும்;*
*போதமிகும் ஆகமங்கள் அருச்சை யின்கண்*
*பூரணன்றன் பதம்எய்தும் வழியைக் காட்டும்.* 60

*சரியையினைக் கிரியையினை யோகம் தன்னைச்*
*சால்புடைய ஞானத்தை எவரும் காணப்*
*பரிவுடனே இனிதருளும் ஆக மங்கள்*
*பாரதத்துப் பண்பாட்டின் மூலம் ஆகும்.* 61

*வித்தகவை கானசத்தைச் சான்றோர் போற்ற*
*விளங்குபஞ்ச ராத்திரத்தை - இந்நூல் போலப்*
*பத்தியுடன் விளக்கியநூல் இல்லை இல்லை*
*பரந்தாமன் இஃதறிவான் உண்மை உண்மை.* 62

### வேறு

*சரித்திரம் கடந்த சமய உண்மையை*
*சரித்திரக் கையால் தகவுறக் காட்டும்*
*வித்தகப் புலமையின் விறலை*
*சத்தியம் அறியும் தமிழும் அறியும்.* 63

### வேறு

*பாரதத்தின் சரிதத்தைக் கி.பி. என்னும்*
*பதமற்ற கஜக்கோலால் அளந்து பார்த்தால்,*
*பாரதத்துச் சமயத்தைக் கி.மு. என்னும்*
*பரிவற்ற சங்கிலியால் அளந்து பார்த்தால்* 64

### வேறு

*அல்வழி என்றே யறிந்த கலைக்கோன்*
*நல்வழி பற்றி நற்பொருள் கண்டனர்.* 65



### வேறு

*மாயோன் வழிபாடே மண்ணுலகில் வைணவமாய்ச்*
*சால உயர்ந்த தகவை விரித்திசைத்தும்,*
*பழந்தமிழர் கண்ட பரம் பொருளை நன்றாய்*
*அளந்தறிந்த மாண்பே அறிவின் விருந்தாம்;*
*உள்ள தொருபொருளே ஓரா யிரமாக*
*விள்ளவரும் உண்மை விளங்கப் பகர்ந்தருளும்*
*சத்திய ஞான சமரசத்தை ஆசிரியர்*
*வித்தகமாய் இங்கே விரித்திசைத்தார்; வாழ்வுற்றோம்.* 66

### வேறு

*மேற்கணக்கின் இதயமாம் பரிபாட லின்கண்*
*மேலாய கீழ்க்கணக்கின் முடிமணியாம் குறளில்*
*பாற்பட்ட சான்றோர்கள் மாயவனின் மாண்பைப்*
*பரிந்திசைத்தார் ஞானமெலாம் தெரிந்துய்ந்த தம்மா.* 67

*கச்சிநகர் தனில்மேவும் திருவெஃகா, மாயோன்*
*கனிவுடனே அறிதுயில்கொள் திருவரங்கம், என்றும்*
*நற்றவருக் கொளியருளும் இருந்தையூர், யாவும்*
*நயந்துரைத்தார்; சான்றவர்கள் வியந்து மகிழ்ந் திட்டார்* 68

*வாழ்வருளும் நற்றிணையில் மாயவன்வாழ்த் தாக*
*வாய்ந்தகவி திருமங்கை யாழவார்தம் பாட்டில்*
*நிழலிட்டுப் பொலிவதனைக் காட்டுகின்றார், சான்றோர்*
*நிகரற்ற புலமைக்குத் தலைவணக்கம் செய்வார்.* 69

### வேறு

*தாமரை மலர்க்குத் திருவடி மலரால்*
*தகவுறு நன்மையை வழங்கும்*
*பூமகள் மணாளன் திருவருட் சமயம்*
*பொலிவுறு தத்துவம் வழங்கி*
*மாமறை முடிவில் மேவிய ஞான*
*வழக்கினை உலகிற்கு நல்கித்*
*தோமறு மாய இருளினை யோட்டித்*
*துலங்கலை இந்தநூல் விளக்கும்.* 70




*கருமத்தை ஞானப் பொலிவினை உறுப்பாய்க்*
*கண்டிட்ட புனிதநற் பத்தி*
*மருமத்தை உணர்த்தி, அதன்சிர மத்தை*
*மாண்புறும் உளந்தொறும் வித்தி*
*பெருமையால் எளிய பண்பினால் யார்க்கும்*
*பீடுறு முத்தியை வழங்கும்*
*அருமையார் தூய பிரபத்தி தன்னை*
*அமைவுற இந்தநூல் விளக்கும்.* 71

*சருக்கரை தன்னால் புனைந்தபொம் மைக்குச்*
*சால்பருள் கரும்புவில் போலத்*
*திருக்கிளர் ஞான மேவடி வாகத்*
*திகழ்ந்திடும் நுண்ணிய ஆன்மா*
*உருக்கொளும் புனித தருமபூ தத்தால்*
*ஒளியினை மிகமிகப் பெற்றுப்*
*பெருக்குறும் பண்பால் இருளினை யோட்டிப்*
*பிறங்கலை இந்தநூல் விளக்கும்.* 72

*நலம்செறி அரங்கன் கோவிலில் புனித*
*நயந்தரு மார்கழி மதியில்,*
*துலங்குறு ஞான வாய்மொழி முதலாம்*
*தூயநற் பழந்தமிழ் மறைக்குப்*
*புலங்கிளர் பெரிய உற்சவம் கண்டு*
*பொலிவுறு சமயத்தை வளர்த்து,*
*நிலந்தரு புகழ்கொள் ''பெரியவர்'' இதய*
*நெறியினை இந்தநூல் விளக்கும்.* 73

*மூன்றுகோல் ஏந்தி ஐந்துகோல் வென்ற*
*முனிவரன் யதிபதி முடியால்,*
*சான்றவர் இதய மலருறும் அடியால்,*
*சால்புறு பெரியவர் தம்மைத்*
*தோன்றுசீர் சான்று வைணவம் வளர்க்கத்*
*துலங்குகால் வாயெனப் பரந்து*
*வான்றரும் புகழ்கொள் அரியணைச் செல்வர்*
*மாண்பினை இந்தநூல் விளக்கும்.* 74




திட்பமாய், அறிவாய், அடிமையாய், வினையின்
சிமிழ்ப்பினால் விபுத்துவம் இழந்து
நுட்பமார் அணுவாம் நல்லுயிர்த் திரளை,
நூற்றொரு கோடிமேல் விரிந்து
பெட்புறும் உலகாய் விரிபகு தியினைப்,
பிறப்பறுந் தருளிறை யவனை,
நட்புறக் காட்டும் இந்தநூல் தமிழர்
தற்றவப் பயனென அறிந்தேன். 75

வையக மாந்தர் குருட்டினைப் போக்கி
வளமுறு ஞானக்கண் நல்கிப்
பொய்யுறும் இருளைத் தொலைத்துயிர்க் கருளை
புரிந்திடும் திருமகல் அருளால்
ஐயனை அடையும் நன்னெறி காட்டும்
அற்புத நலம்செறி இந்நூல்
மையறு புகழ்சால் எதிபதி முக்கோல்
மகிழ்தவப் பயனென அறிந்தேன். 76

நிறைவுறும் மூலப் பகுதியை, ஞான
நேயமார் உயிர்ப்பெரும் திரளை
குறைவரும் உடலாய்க் கொண்டஅப் பிரம்மம்,
கோதிலாக் காய்கனி பெற்று
நறையுறு தருவே எனும்உண்மை பகரும்
நலமமை ஞானமார் இந்நூல்
பொறைவடி வாய பிரபந்தம் முன்பு
புரிதவப் பயனென உணர்ந்தேன். 77

கருணையே வடிவாம் எதிபதி, ஞானக்
களஞ்சிய தேசிகன், புல்லர்
மருணெறி போக்கும் வரமுனி. இவர்கள்
வளர்த்திட்ட நல்லறம் வளரத்
தெருணிறை கின்ற **வைணவச் செல்வம்**
திருவுருக் கொண்டதை அறிந்தேன்
இருளினைத் தகர்த்தேன்; என்றினி திசைப்பர்
இப்பெரு நூலுணர் புலவர். 78

*பங்கமில் புகழான் எதிபதி கண்ட*
*பண்புறு தத்துவத் தினுக்குத்*
*துங்கமார் மூலம், வேதமே என்னும்*
*துணிவினை இந்தநூல் போல*
*மங்கலமாகப் பகர்ந்தநூல் இந்த*
*மாண்புறு தமிழகத் தில்லை*
*இங்கிதைப் பயின்றேன் ஒளியுற்றேன் என்பர்*
*இலங்குமிந் நூலுணர் புலவர்.* *79*

*பரத்துவம் முதலாம் ஐவகை நிலையைப்*
*பாங்குறத் தெரிந்தனம்; உயிரின்*
*தரத்தினை உயர்த்தும் பிரபத்தி நெறியைத்*
*தகவுறத் தெரிந்தனம்; தெய்வ*
*வரத்தினை வழங்கும் மந்திர நெறியின்*
*மாண்பினை உணர்ந்தனம்; அதனால்*
*சிரத்தினில் ஏற்கத் தக்கதென் நுரைப்பர்*
*திருந்துமின் நூலுணர்ப் புலவர்.* *80*

*உலகதத் துவங்கள் அனைத்தையும் படியாய்*
*உவப்பக் கொண்ட இப் பெருநூல்*
*கலைகளை அளக்கும் பொற்படி என்றும்,*
*கலிமறை இதயமே என்றும்,*
*மலர்முகத் திருவின் களத்தினில் மேவும்*
*மங்கள சூத்திரம் என்றும்*
*பலர்பல வாறாய்ப் புகலுவர் யானோ*
*பாரத தீபமே தென்பேன்.* *81*

*இதுவரை எவர்க்கும் புலப்படா திருந்த*
*இறைநிலை, உயிர்நிலை, மயக்கும்*
*மதுவினை வழங்கும் தடைநிலை, அதனை*
*மாய்த்திடும் அருள்நிலை, ஞானப்*
*புதுமைசேர் வீட்டின் பெருநிலை யாவும்*
*புகல்வதால் இப்பெரு நன்னூல்*
*பதுமையின் அருளால் புவியினில் உதித்த*
*பாரத தீபமே தென்பேன்.* *82*

*சாத்திரப் புலமை வேதத்தில் புலமை*
*தகவுறு காப்பியப் புலமை*
*தோத்திரப் புலமை பெற்றனம்; இனிமேல்*
*துன்பத்தில் ஆழ்ந்திடேம்; குன்றா*
*நாத்திரம் பெற்றேம்; இனியொரு போதும்*
*நாத்திகத் திழித்திடேம் - எனச்சொல்*
*பாத்திரம் யாண்டும் படைக்குமிப் பெருநூல்*
*பாரத தீபமே என்பேன்.* *83*

*மலர்தொறும் சென்று மகரந்தம் சுமந்து*
*மாண்புறு தேனிறால் எடுக்கும்*
*நலமமை சுரும்பும், கடல்தொறும் சென்று*
*நற்புனல் வாங்கிடும் முகிலும்,*
*உலகுகள் தோறும் சென்றுபல் லுடம்பால்*
*ஒப்பிலா அனுபவம் ஈட்டும்*
*புலமுறும் உயிரும், பெற்றிடும் முயற்சிப்*
*பொலிவினை இந்தநூல் காட்டும்.* *84*

*பொற்புறும் குடந்தைப் பதிவயின் இராமன்*
*பொலிவுறு கோவிலின் மேவும்*
*சிற்பத்து நளின மாண்பினை, ஞானச்*
*சிதம்பரக் கோபுரத் துயர்வை,*
*நற்புகழ் அண்ணா மலைரெட்டி எடுத்த*
*நாயகன் கோவிலின் வனப்பை*
*அற்புதம் மேவும் வைணவச் செல்வத்*
*தறிபவர்; தமிழநலம் காண்பார்.* *85*

*செவ்விய தியாக ராசரின் ஞானச்*
*சிறப்புறு கீர்த்தனை மேவி*
*இவ்வயின் புகழ்கொள் மோகனம், சாமா*
*இணைஇலாத் தேவகாந் தாரி,*
*பவ்வநேர் தர்பார், பைரவி, தோடிப்*
*பண்பெலாம்* **வைணவச் செல்வம்**
*மவ்வலின் மணம்போல் நம்முளத் தருளும்*
*மாண்புறும் இதயமீ துணரும்.* *86*




*மட்டறு புகழ்சால்* **வைணவச் செல்வம்**
*மாண்புற நாடொறும் வழங்கும்*
*வட்டியால் உலக வாழ்வினில் இன்ப*
*வளங்களை எய்தலாம்: முதலால்,*
*கட்டறு ஞான வளங்களை மலர்த்தும்*
*கண்ணிய வீட்டினைப் பெறலாம்;*
*நட்டமே இல்லை இப்பெரும் செல்வம்*
*நாடொறும் வளர்த்திடும், புலவீர்!* *87*

*தத்துவம் ஒருபால் ஒளிவிடும்; ஞானச்*
*சரோருகம் ஒருபக்கம் மலரும்;*
*வித்தகப் பத்தி ஒருபுறத் திலங்கும்;*
*வேதமோ யாங்கணும் துலங்கும்;*
*சத்தியம் ஞானக் கோவினை ஏந்தித்*
*தந்ததே இந்தநூல் என்று*
*பத்தியின் மிக்க சான்றவர் உணர்வர்;*
*படைத்தவர் வாழிபல் லூழி.* *88*

*ஆரணம் போற்றும்* **வைணவச் செல்வம்**
*அமைந்திடும் கோவிலம் நூற்குத்*
*''தோரண வாயில்'' அமைத்தனன் ஞானச்*
*சுந்தரக் கம்பனின் அடிமை;*
*தாரணிக் கீந்து சமயமே ஞானச்*
*சாந்தியை வழங்குமென் றுணர்ந்தோன்*
*பூரண ஞானக் கம்பரா மப்பேர்ப்*
*புண்ணியன், பாவல ரேறே.* *89*

---






# காலக்கோடு

## வாழ்க்கை

**During** the 90 long years of Professor's life, so many happenings had occurred in his childhood, education, career and his interaction with other academicians, educational administrators, Tamil scholars, friends and associates. All these interesting incidents/occasions have been grouped into four broad categories - ***Life, Books, Honours & Endowments*** - in order to enable the viewers to have a meaningful and useful perspective of Professor. Just have an enjoyable journey!

## Covering Professor's life, family and career

| **Events [Life, Family & Career]** | |
|---|---|
| 1916 | **Birth at Perahambi [27 Aug], Lalgudi Taluq, Trichy Dist., Tamilnadu** |
| 1917 | Life starts at Kottathur (Father's place), Musiri Taluq, Trichy Dist., Tamilnadu |
| 1919 | Death of his father at Kottathur, Trichy Dist., Tamilnadu<br>Moves back to his maternal uncle's house to Perahambi, Trichy Dist., Tamilnadu |
| 1921 | His education begins at Perahambi, Trichy Dist., Tamilnadu |
| 1922 | Enjoys the luxurious life at his maternal uncle's [Periya Pannai - Landlord] house. |
| 1923 | He finds some friends. |
| 1924 | His maternal uncle remarries;<br>Returns to his native village, Kottathur along with his maternal grandmother |
| 1925 | His education continues in Kottathur, Trichy Dist., Tamilnadu |
| 1929 | Death of his maternal grandmother |
| 1930 | His education ends at Kottathur, Trichy Dist., Tamilnadu |
| 1931 | Completes III Form [ = VIII std.] at Zamindar Middle School, Thuraiyur [with the SECOND rank in the school] |
| 1932 | Completes IV Form [= IX std.] at District Board High School, Musiri |
| 1933 | Completes V Form [= X std.] at District Board High School, Musiri |
| 1934 | Completes VI Form [= XI std.] at District Board High School, Musiri [with the SECOND rank in the school] |



| | |
|---|---|
| 1935 | Obtains Scholarship from Reddy Jana Sangham, Trichy, Tamilnadu<br>Joins Intermediate Course at St Joseph College, Trichy, Tamilnadu |
| 1936 | Completes Intermediate Course at Trichy [St Joseph College];<br>Marriage with Sellapapa [September];<br>Serious illness [discontinues studies] |
| 1937 | Visits Mettur Dam & Kooduthurai at Bhavani |
| 1938 | Joins BSc (Chemistry) at St Joseph College, Trichy, Tamilnadu |
| 1939 | Completes his BSc [Chemistry] at Trichy [St Joseph College] with a THIRD rank in the University of Madras |
| 1940 | His serious job-hunting fails;<br>Sells the wet land [.66 cents, worth of Rs.1500] for Rs.700 to his relatives<br>Joins Teachers' College, Saidapet [to do LT], Chennai, Tamilnadu |
| 1941 | Completes his LT at Saidapet, Madras [Chennai]<br>Joins as a Headmaster, Zamindar High School, Thuraiyur, Trichy Dist., Tamilnadu<br>Establishes his family at Thuraiyur, Trichy Dist., Tamilnadu |
| 1944 | Completes Vidwan in Tamil [Private study] |
| 1947 | Completes BA [Tamil] with FIRST rank in the University of Madras [Private study] |
| 1948 | Pilgrimage [with his wife & other relatives] to selected Holy Shrines/Places seeking divine blessings for a child |
| 1949 | Birth of his first son Ramalingam (13 October) @ Thuraiyur, Trichy Dist., Tamilnadu |
| 1950 | Joins Dr Alagappa Chettier Training College, Karaikudi, |
| 1951 | Completes his MA [Tamil] with SECOND rank in the University of Madras [Private study] |
| 1953 | Birth of his second son Ramakrishnan (22 November) @ Karaikudi, Ramnad Dist., Tamilnadu |
| 1959 | Death of his mother [1 January] @ Karaikudi, Ramnad Dist., Tamilnadu<br>Death of his maternal uncle [July] |
| 1960 | Joins Sri Venkateswara University, Tirupathi, AP [August] |
| 1964 | Registers for PhD, Sri Venkateswara University, Tirupathi, Andhra Pradesh |



| | |
|---|---|
| 1966 | Shifts his family from Karaikudi to Tirupathi, Andhra Pradesh; |
| 1968 | Visits Varanasi, Ayodhya and Gaya with his wife |
| 1969 | Completes his research and submits his Thesis, "***Religion and Philosophy of Nalayira Divya Prabhandam with special reference to Nammalvar***". |
| 1970 | Receives his PhD Degree [from Sri Venkateswara University, Tirupathi, Andhra Pradesh]<br>MA classes commence in the Department of Tamil, Sri Venkateswara University, Tirupathi, AP |
| 1972 | Establishes "*St Thiruvalluvar Gold Medal*" to be given to MA (Tamil) student who gets FIRST rank with first class (in the Department of Tamil, Sri Venkateswara University, Tirupathi)<br>Establishes "*St Ramalinga Swamigal Gold Medal*" to be given to MA (Tamil) student who gets FIRST mark in "Literary Criticism" Paper (in the Department of Tamil, Sri Venkateswara University, Tirupathi) . |
| 1976 | Marriage of his first son (20 February) @ Vellore, Tamilnadu<br>Celebrates his 60th Birth Annniversary at Lord Venkateswara Temple, Tirumala, AP |
| 1977 | Marriage of his second son (1 June) @ Trichy, Tamilnadu<br>Birth of his first granddaughter (14 July), first girl-child after a gap of four generations in Professor's genealogy [Mrinalini - elder son's daughter] @ Vellore, Tamilnadu<br>Retires from Sri Venkateswara University [October]<br>Felicitation Volume to Prof Dr N Subbu Reddiar in Commemoration of his 61st Birth-day [*Studies in Arts and Science]* by the Department of Tamil, Sri Venkateswara University, Tirupathi, AP] |
| 1978 | Settles with his family at Madras [Chennai], Tamilnadu<br>Chief Editor, Tamil Encyclopedia [of Tamil Academy] - 18 months<br>Birth of his first grandson [22 June] [Venkatesh - younger son's son] @ Madras, Tamilnadu |
| 1979 | Emeritus Professor, Centre of Philosophy [@ Kancheepuram], Tamil University, Tanjore, Tamilnadu, INDIA |
| 1980 | Birth of his second granddaughter (15 July) [Anupama - elder son's daughter] @ Vellore, Tamilnadu<br>Birth of his second grandson (15 Nov) [Prakash - younger son's son] @ Madras, Tamilnadu |
| 1983 | Completes the construction of his own house at AD-13 ("Venkatam"), Anna Nagar West, Chennai - 600 040, Tamilnadu, INDIA |
| 1986 | Celebrates his 70th Birth Anniversary in the Kandha Kottam [Murugan Temple] at Chennai |
| 1989 | Appointed as Emeritus Professor for Life, Dept of Tamil Language & Literature, University of |

